# for that millionaire look

Century
for 100% cotton
textiles

CENTURIZED
PRESHRUNK FABRIC

THE
**CENTURY**
SPG. & MFG. CO. LTD.,
BOMBAY 25 DD



Century's
**Cosy-Cot**
cotton SHIRTINGS
with Rich Woollen Feel

For Fashion Fabrics choose
*Century Shirtings!*

NPS-CM 16

பசியைப் பெருக்குவதோடு நின்றுவிடும் எந்த டானிக்கும் பாதிவேலையைத்தான் செய்யும்

*

இன்க்ரிமின் பெறுவீர்..

உண்ணும் மிகையான உணவை ஓங்கிய வளர்ச்சியாக மாற்றும்








*

**சேருவீர் இன்க்ரிமின் இனத்தோடு... வளர்ச்சிக்கான பசியைப் பெறுவீர் உடனே!**

பசியைப் பெருக்குவதோடு மட்டுமின்றி, உண்ணும் மிகையான உணவை ஓங்கிய வளர்ச்சியாக மாற்றுகிறது இன்க்ரிமின் டானிக். காரணம், உங்கள் குழந்தை சாப்பிடும் புரதச் சத்துக்களை மேம்படப் பயன்படுத்திக்கொள்ளும் அதிமுக்கியமான அமினோ அமிலம் அதில் அடங்கியுள்ளது.

◀ பெரிய குழந்தைகளுக்கு இரும்புச் சத்து அடங்கிய இன்க்ரிமின் ஸிரப் — 175 மிலி & 57 மிலி. இளங் குழந்தைகளுக்கு இன்க்ரிமின் டிராப்ஸ் — 10 மிலி.

# இன்க்ரிமின்*

டானிக் எல்லா மருந்துக் கடைகளிலும் கிடைக்கின்றன.

* அமெரிக்கன் ஸையானமிட் கம்பெனியின் ரிஜிஸ்டர்டு டிரேடு மார்க்.

Lederle

லின்டாஸ்-INC, 22 - 140 TM

விரோதிகிருது, மாசி 29 • மார்ச் 12, 1972

# கல்கி

## பொருளடக்கம்



''கல்கி''யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.



**அட்டைப்படம் :**

பொன்னியின் செல்வன் முடிந்து விட்டது; ஆனால் அது எழுப்பிய மகிழ்ச்சி ஆரவாரம் இன்னும் அடங்கவில்லை. நேயர்களின் இதயத்தில் இதிகாச நாயகனைப்போல் நீங்கா இடம் பெற்றுவிட்ட அருள்மொழி வர்மனும் ராஜராஜ சோழனையும் அவனது உள்ளம் கவர்ந்த பாக்கியசாலியாம் வானதியையும் இவ்விதம் மேலட்டையில் வண்ணச் சித்திரமாக வழங்குகிறார் ஓவியக் கலைஞர் திரு வினு. □

கல்கி

மலர் 31
இதழ் 33



தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா
-- பாரதியார்

# அரசாங்கமே நடத்தும் அராஜகம்

பல மாநிலங்களில் தேர்தல்கள் நடக்கின்றன. பண பலத்தின் மீதே தேர்தலில் வெற்றி கண்டுவிடலாம் என்று இந்திரா காங்கிரஸ் கருதுகிறது. புத்திசாலியான ஸ்ரீமதி இந்திரா காந்தி தமது கட்சிக்கு வந்து குவியும் நிதி அவ்வளவும் அடக்குமுறையினால், அநீதியினால், அச்சுறுத்தியே பெறப்படுகிறது என்பதை உணரவில்லையா? அவரது கொள்கையில் பற்று இருப்பதாலோ அவரது ஆட்சியைப் பாராட்டியோ பணக்காரர்கள் நிதி உதவி செய்துவிடவில்லை. அச்சத்தினலேயே அவரது கட்சிக்கு வாரி வழங்குகிறார்கள்; அன்பினால் இல்லை. நிதி உதவுகிறவர்களுக்கு இந்த ஆட்சியின் போக்குப் பிடிக்கவில்லை. ஆயினும் உதவாவிடில் உடனடியாகத் தங்களுக்கு ஏற்படக்கூடிய இன்னலையும் அழிவையும் கருதியே 'நன்கொடை' தருகிறார்கள். இவ்விதம் நிதியம் பெறுவது நன்கொடை அல்ல. அது பலவந்தக் கொள்முதல் தான். நல்லாட்சிமுறை இதுவல்ல. அச்சுறுத்திப் பணம் பெறுவது அராஜகமேயாகும். நல்லாட்சிக்கும் அராஜகத்துக்கும் இடையே உள்ள மாறுபாடு ஸ்ரீமதி இந்திராவுக்குத் தெரியாமற் போய்விட்டதா?

தமக்கும் மக்களுக்கும் உண்மையான நலனைப் பிரதமர் கருதுவாராயின் எவ்வளவு விரைவில் இயலுமோ அவ்வளவில் பெர்மிட் — லைசென்ஸ் ஏகபோக்கியத்தைக் கைவிட அவர் தீர்மானிக்க வேண்டும். இந்த ஏகபோக்கியம் காரணமாகத்தான் தொழிலதிபர்கள் ஆளும் கட்சிக்கு ஏராளமான நிதியம் அளித்து வருகிறார்கள். பெர்மிட் — லைசென்ஸ் விநியோகப் பொறுப்பைப் பூரண சுதந்திரம் பெற்ற ஓர் அரசியல் கலப்பற்ற நிபுணர் குழுவின் வசம் விட வேண்டும். பெர்மிட் — லைசென்ஸ் ஆட்சியில் மத்திய சர்க்காரிடமிருந்து மாநில சர்க்கார்களும் பங்கு பெறுமாயின் அது தீமையை வளர்ப்பதேயாகும். இந்தப் 'பாகப் பிரிவினை'யால் ஆங்காங்கு ராஜ்யங்களில் உள்ள கட்சி யஜமானர்களும் தத்தம் அதிகாரத்தை நிலைநாட்டிக் கொள்வர். மொத்தத்தில் நாடெங்கிலும் ஊழல்கள் அதிகரிக்கும். தீமை வெகு விரைவில் பரவும். அதை எவ்வளவுக் கெவ்வளவு விரைவில் வெல்கிறோமோ அவ்வளவுக் கவ்வளவு நாடு க்ஷேமம் அடையும்.

தற்போது தொழிலகங்களின் மீது மத்திய சர்க்கார் செலுத்தும் ஊழல் நிறைந்த செல்வாக்குக் காரணமாகவே, மாநிலங்களின் அரசியல் ஊழல்கள் குறித்துத் துப்பு இலாகாவின் அறிக்கைகளை வெளியிட மத்திய அரசுக்குத் தார்மிக பலம் இல்லாமல் போயிருக்கிறது. தம்மிடம் மூட்டை மூட்டையாகக் குறைபாடுகள் இருக்கையில், அதைவிடக் குறைவாகப் பிறரிடம் காணும் குறைபாட்டை வெளியிடுவதற்கில்லை என்று ஸ்ரீமதி இந்திரா அறிந்திருக்கிறார்! கண்ணாடி வீட்டில் வசிப்பவர் வெளியே உள்ளவர் மீது கல் எறிவதற்கில்லை என்பதை ஸ்ரீமதி இந்திரா காந்தி நன்கு உணர்ந்திருப்பதாகத் தெரிகிறது.

அராஜகம் என்பது நீடித்து நிற்க முடியாது. பெர்மிட் — லைசென்ஸ் அதிகாரத்தைச் சட்ட விரோதமாகப் பிரதமரே ஏகபோக்கியமாக வைத்துள்ளவரையில், நிர்ப்பந்த நிதி வசூலும், அராஜகமும் நீடிக்கும் என்பது உண்மை. ஆயினும் இந்த நிலை நிரந்தரமாக இராது. அதருமக் கொள்கைகளும் தவறான வழியில் லாபம் பெறப் பார்க்கும் மாய வித்தையும் என்றோ ஒரு நாள் சாம்பலாகத்தான் வேண்டும். தெய்விகமான தூய்மையே இறுதியில் வெற்றி பெறும். இது எப்போது நிகழும், எப்படி நிகழும் என்பதை ஆண்டவனே அறிவான். எந்த உபாயத்தின் மூலம், எவரைக் கருவியாகக் கொண்டு இதைச் செய்வது என்பதும் ஆண்டவனுக்கே தெரியும். ஆயினும் இயற்கை விதிகள் பொய்யாமல் செயற்படுவதுபோல் இந்த மாற்றமும் நிச்சயமாக நிகழ்ந்தே தீரும் என்று நாம் உறுதி கொள்ளலாம்.

(அடிப்படை: **ராஜாஜி 'ஸ்வராஜ்யா'வில் எழுதியது.**)

# ராஜாஜியின் கருத்துக்கள்

## சேமமுற வேண்டுமெனில்...

தமிழகத்தில் ஆட்சி நடத்துகிற தி.மு.க. சர்க்கார், அதன் கட்சிக்காரர்கள் ஆகியோரின் போக்குகள் அனைவருக்கும் தெரிந்தவை. அவை பற்றி நான் அதிகம் சொல்ல வேண்டிய அவசியமில்லை. தி.மு. கழகத்தினரை ஆட்சியிலிருந்து அகற்றுவதில் எவ்வளவுக்கெவ்வளவு விரைவில் திரு காமராஜுக்கு ஆதரவும் சக்தியும் தருகிறோமோ, அந்த அளவுக்கு நம் ராஜ்ய மக்களுக்கு நன்மை உண்டாகும். காலம் கடத்தினால், அதற்குள் அடுத்த தலைமுறையினரை மது அரக்கனுக்கு அடியோடு விற்று விட்டதாகிவிடும். கள்ளும், நாட்டுச் சாராயமும் மட்டுமின்றி, விஸ்கி, பிராந்தி முதலிய மது வகைகளை விற்கும் கடைகளும் எங்கு பார்த்தாலும் பரவிக் கிடக்கின்றன. இந்தச் சூழலில் மது அரக்கன், அறியா இளைஞர்களைப் பற்றி இழுத்துத் தனது மீளா அடிமைகளாக்கிக் கொள்வது வெகு எளிதில் நடந்து விடும். தீமை அதிவிரைவில் பரவுகிறது. நம் சௌகரியத்துக்காக அது காத்து நிற்பதில்லை. ஆனபடியால் இப்போதே தென்னாட்டில் மதுவிலக்கை மீண்டும் கொண்டு வருவதில் ஒருமுகமாகக் கவனம் செலுத்துவோம். நம் மக்களிடம் உண்மையன்பு கொண்டுள்ள அனைவரும் திரு காமராஜுக்குச் சகாயம் செய்ய வேண்டும். இவ்விஷயத்தில் நம்முடைய பெண் மக்களை ஏகோபித்து எழச் செய்தாலே போதுமானது; காரியம் நடந்து விடும். தி.மு.க. தலைவர்கள் யாரை ஏமாற்றினாலும் நமது பெண் குலத்தை ஏமாற்ற முடியாது. பெண்மக்கள் மதுவின் தீமையை அவ்வளவு நன்றாக அறிந்தவர்கள்.

இந்திரா காந்தியின் மத்திய நிருவாகத்தின் வாலைப் பிடித்துக் கொண்டு தொங்குவது தான் தமிழ் நாட்டு தி. மு. க.வின் கதி. "மாநில சுயாட்சி" என்பதெல்லாம் மக்களை ஏமாற்றும் அபத்தப் பேச்சு. தி.மு.க. கூட்டத்தின் ஊழல்களைப் பற்றி மக்கள் பேசி வருவதையெல்லாம் ஒருபுறம் ஒதுக்கிவிட்டு மக்களைக் குடிகாரர்களாக்கி வருகிறார்கள். இது ஒன்றே போதும், இந்தத் தி. மு. க. நிருவாகத்தை ஒழித்துவிடும் மிக நியாயமான முயற்சிக்கு மக்கள் ஆதரவு தருவதற்கு.

## நில வரம்பு குறைப்பு

நில உடைமைகளின் வரம்பைக் குறைப்பது பொறாமையையே அரசியலாகக் கொண்டவர்களுக்குத்தான் திருப்தி தரும். இயந்திரச் சாகுபடி முறைகள் வளர்ந்து, உணவு உற்பத்தி பெருக வேண்டும் என்று விரும்புகிற எவரும் உச்சவரம்பின் அளவைக் குறைப்பதில் திருப்தி கொள்ள முடியாது. பண்ணைகளின் அளவு கணிசமாக இருந்தால்தான் இயந்திரச் சாகுபடிக்கான மூலதனச் செலவை ஏற்க முடியும். அரசாங்கத்தின் சட்டமின்றியே அடுத்த தலைமுறைக்கு நிலச் சொத்து மாறுகிறபோது அது பல பாகஸ்தர்களுக்குத் துண்டு போடப் படுவதையும் கவனிக்க வேண்டும்.

# அகாதெமிப் பரிசுக் கலைஞர்

தமிழகத்தின் தலைசிறந்த எழுத்தாளர்களில் ஒருவரான திரு நா. பார்த்தசாரதி அவர்களின் 'சமுதாய வீதி' என்ற நாவலுக்கு சாகித்திய அகாதெமி பரிசு கிடைத்திருப்பதில் பெருமகிழ்ச்சி கொள்கிறோம். பரிசு பெற்றுள்ள "சமுதாய வீதி" இன்றைய சமுதாயத்தை நேரடியாகப் படம் பிடித்துக் காட்டும் நாவல். சதா அவசர நிலையில் அலறிக்கொண்டோடும் நகர வாழ்வின் சாகஸங்களுக்கு வெளிச்சம் போட்டுக் காட்டும் விதத்தில் பாத்திரங்களின் படைப்பும் உரையாடல்களும் விளங்குகின்றன. நாகரிக வாழ்வென்று கருதப்படும் போலி வாழ்வின் — மனிதன் தன்னைத்தானே ஏமாற்றிக் கொள்ளும் அவல வாழ்வின் — இழிநிலையைச் சுட்டிக் காட்டிச் சவுக்கடி கொடுக்கிறார் ஆசிரியர். பட்டணத்துப் போலி வாழ்க்கைக்கு இடையிலும் நல்ல இதயம் படைத்த மனிதர்கள் உண்மையான வாழ்க்கை வாழ வேண்டும் என்று துடிப்பதுதான் கதையின் உயிர் நாடி.



காவிய உள்ளம், கற்பனை வளம், தேர்ந்த புலமை, அழகு நடை, இலட்சிய நோக்கு இவை அனைத்தும் குறைவறப்பெற்ற திரு நா. பார்த்தசாரதி கௌரவமாக, கண்ணியமாக எழுதித் தமிழன்னைக்குப் பணி புரிந்து வருபவர். இளம்பிராயத்திலேயே தமது சக்தி வாய்ந்த எழுத்தினால் தமிழ் எழுத்துலகில் நற்பெயர் எடுத்தவர். 'பாண்டிமாதேவி', 'குறிஞ்சி மலர்', 'மணிபல்லவம்', 'பொன் விலங்கு' ஆகிய அவரது புதினங்கள் 'கல்கி'யில் வெளியாகி ஏராளமான வாசகர்களை மகிழ்வித்தன. 'தீபம்' என்ற சஞ்சிகையின் மூலம் இலக்கியத் தொண்டு புரிந்து வரும் இந்த இலட்சிய எழுத்தாளரை அகாதெமிப் பரிசு குன்றிலிட்ட தீபமாக்கட்டும்!



**"மதுர கலா ப்ரவீண"**
**"மதுர கலா சம்ரக்ஷக"**



பிப்ரவரி 27-ந் தேதி மதுரை ஸ்ரீ சத்குரு சங்கீத சமாஜத்தில் ஒரு மதுர நிகழ்ச்சி மகோற்சவம் போல் நடந்தேறியது. சமாஜத்தினர் ஸ்ரீமதி எம். எஸ். அவர்களுக்கு "மதுர கலா ப்ரவீண" என்ற பட்டத்தையும், ஸ்ரீ சதாசிவம் அவர்களுக்கு "மதுர கலா சம்ரக்ஷக" என்ற பட்டத்தையும் வழங்கினர். ஸ்ரீ சதாசிவம் தம்பதியருக்கு, ஸ்ரீ டி. டி. கே. அவர்கள் பட்டங்களை வழங்குவதைப் படத்தில் காண்கிறோம். உடனிருப்பவர் சத்குரு சங்கீத சமாஜத் தலைவர் ஸ்ரீ டி. கே. சிவசாம்பன். ஸ்ரீமதி எம்.எஸ்ஸுக்கு மலர்மாலை அணிவிப்பவர் சமாஜத்தின் உபதலைவராகிய ஸ்ரீமதி அம்புஜம் கிருஷ்ணா.

## நிக்ஸனின் சீன விஜயம்

சீனாவில் நாம் தங்கியிருந்த ஒரு வாரமானது உலகையே மாற்றிவிட்டது என்று பெரிதுபடுத்திப் பேசியிருக்கிறார் அமெரிக்க ஜனாதிபதி நிக்ஸன். ஆனால் இந்தக் கூற்றுக்குச் சான்றாக ஏதும் நடந்துவிடவில்லை என்பது கண்கூடு. அமெரிக்காவும் சீனமும் கொண்டுள்ள புதுத் தொடர்பிலிருந்து அணு ஆயுதம் ஏவுகணை இவைகளை ஒழிக்க வழி பிறந்தாலும் பிறக்கக் கூடும் என்று சிலர் ஆசையுடன் எதிர்பார்த்தனர். ஆனால் நிக்ஸன் — சூ படாடோபக் கூட்டறிக்கையில் இந்தச் சர்வதேசப் பிரச்னை பற்றி ஒரு வார்த்தைகூட இல்லை! ஜனாதிபதி நிக்ஸனின் சீன விஜயத்தினால் இரு பெரும் உலக வல்லரசுகளின் பகை வெளிப்பார்வைக்கேனும் நீங்கியிருப்பதற்காக மகிழ்வது தவிர வேறு எந்த விசேஷமான நற்பலனும் விளைந்துவிடவில்லை.

மாறாக, விசனிக்கத்தக்க, கண்டனத்துக்குரிய அம்சங்கள் சிலவற்றைக் காண்கிறோம். நியாய அநியாயங்களைப் பாராமல் சீனத்துக்கும் பாகிஸ்தானத்துக்குமே சாதகமாகவும், இந்தியாவுக்குப் பாதகமாகவும் இருந்துவிட வேண்டும் என்று நிக்ஸன் உறுதிபூண்டிருப்பது வெளியாகிறது. தெற்காசியாவில் உள்ள நாடுகளிடையே பூசல்கள் தீர்ந்து சமாதானம் ஏற்படுவதில் அமெரிக்கா சீனம் ஆகிய இரு நாடுகளுக்கும் அக்கறை இல்லை என்பது தெளிவாகிறது. இந்தியாவின் காலை வாரிவிட்டதுபோல் எந்தவித மன உறுத்தலும் இன்றி டைவானையும் கைவிட்டிருக்கிறார் நிக்ஸன். தாற்காலிக ஆதாயம் எதையோ நினைத்துத் தார்மிகப் பொறுப்புக்களை அறவே விட்டொழித்துவிடலாம் என்று காட்டியிருக்கிறார் நிக்ஸன். இதைத் தைரியமான நடவடிக்கை என்று கருதுவதற்கில்லை. தார்மிகப் பொறுப்புக்களை விட்டுவிடாமலிருப்பதுதான் தீரமாகும். இப்போது அவர் டைவானையும் இந்தியாவையும் கைகழுவி யிருப்பது இதுவரை சர்வதேசத் தொடர்புகளில் கண்டிராத 'வரலாற்றுப் பிரசித்தி பெற்ற ஒழுக்கக் கேடாகும்' என்று ராஜாஜி கூறுகிறார். நட்பு உடன்படிக்கை, வாக்குறுதி இவற்றை இனி உலக ராஜீய நடவடிக்கைகளில் நம்புவதற்கில்லை என்ற நிலையை உண்டாக்கியிருக்கிறார். அமெரிக்காவின் பௌதிக வளத்தையும், அதன் ஜனாதிபதியின் அதருமப் போக்கையும் காணும்போது, பொருளாதாரச் செழிப்பைவிட ஆத்மிகத்தைக் காப்பதற்கே முக்கியத்வம் தரவேண்டும் என்பது உறுதியாகிறது. தங்களது ஜனாதிபதியின் கழைக்கூத்தாட்டத்தைக் குறித்து அமெரிக்க சட்டசபை என்ன செய்யப் போகிறது, அந்நாட்டு மக்கள் தேர்தலில் என்ன செய்யப் போகிறார்கள் என்று உலகம் கவனிக்கிறது.

# வேத பகவானுக்கு ஓர் ஆலயம்

அநாதியானதும் சனாதன தர்மத்துக்கு ஆதாரமுமான வேதங்களுக்கு, பரந்த இப் பரத கண்டத்தில் தனியாக ஆலயம் இல்லாத குறை நிவர்த்தியாகி யுள்ளது.

ஆனால் இது புதுமையான ஆலயம். ஆகம சாஸ்திர விதிப்படி சில்பிகளைக் கொண்டு, கருங்கல்லையும் உளியையும் துணைக்கொண்டு எழுப்பப்பட்ட ஆலயம் அல்ல. அச்சு யந்திரத்தின் மூலம், பிரத்தியேகமாகத் தயாரிக்கப்பட்ட உயர்ந்த நாகரி லிபியில் அச்சடிக்கப்பட்டு, நான்கு வேதங்களையும் ஓர் அரிய பெரிய, புனித புத்தக வடிவத்தில் அமைத்து, ''இதுதான் வேத ஆலயம்;வேத பகவான் பிரதிஷ்டிதமாக உள்ள புனித மூலஸ்தானம்'' என்று ஆஸ்திக உலகத்துக்கு அளித்திருக்கிறார் வேத தர்சனாசார்ய ஸ்ரீ கங்கேச்வரானந்தா ஸ்வாமிகள்.



உதாசீன் சம்பிரதாயத்தைச் சேர்ந்த ஸ்ரீ கங்கேச்வரானந்த ஸ்வாமியின் சரித்திரம் ஆச்சரியமானது. 1881ம் ஆண்டில் பஞ்சாப் பகுதியில் அவதரித்து, சந்திரேச்வர் என்ற பெயருடன் பாலகனாக இருந்தபோதே பெரியம்மை போட்டுத் தமது பார்வையை இழந்துவிட்டார். விஷ்ணு சகஸ்ரநாமத்தையும் பகவத்கீதையையும் மனப்பாடம் செய்து ஜபித்து வரும்படி அவருடைய குரு கட்டளையிட்டாராம். அதன்படி தினம் தவறாது 22 மணி நேரம் ஜபித்து, அசாதாரண ஞாபக சக்தியைப் பெற்றார். வேத சாஸ்திரங்களைக் கேள்வி மூலமே பூரணமாகக் கற்று சந்நியாஸ ஆசிரமம் ஏற்று, உதாசீன் சம்பிரதாயக் கோட்பாடுகளையும் ஸனாதன தர்மங்களையும் பிரசாரம் செய்யும் பணியில் ஈடுபட்டார். இதற்காக வட இந்தியாவில் பல வித்யா பீடங்களை ஸ்தாபனம் செய்திருக்கிறார்.

கும்பமேளா போன்ற விழாக்களில் யாத்திரிகர்களுக்கு வசதி செய்து கொடுப்பதைத் தமது தர்மப் பிரசாரப் பணியில் ஒன்றெனக் கருதுபவர் ஸ்ரீ கங்கேச்வரானந்தா. ஆயிரக் கணக்கான சிஷ்யர்களை உடைய ஆசார்ய ஸ்தானத்தில் இருக்கிறார். தமது 92வது வயதிலும் இளமைத் துடிப்புடன் விளங்குகிறார்.

சுமார் மூன்று ஆண்டுகளுக்கு முன் நான்கு வேதங்களையும் ஒரே புத்தக வடிவில் அச்சடித்து, சீக்கியர்கள் எவ்வாறு அவர்களுடைய ஆதி கிரந்தத்தைத் தெய்வமாக பூஜித்து வழிபடுகிறார்களோ அதேபோல் இந்துக்களும் ஆதி வேதங்களைப் பூஜித்து, பாராயணம் செய்து வழிபடுவதற்கு வகை செய்ய வேண்டுமென்று ஸ்ரீ கங்கேச்வரானந்தா திருவுளம்கொண்டார்.

அதற்காக நாட்டில் உள்ள வேத நூல்களை எல்லாம் திரட்டினார். அச்சேறாத பல சுவடிகளையும் எங்கெங்கிருந்தெல்லாமோ சேகரித்தார். சுமார் எழுபதுக்கு மேல் இம்மாதிரி பிரதிகளைச் சேகரித்து இந்தியாவின் பல்வேறு பகுதிகளைச் சேர்ந்த வேத விற்பன்னர்கள் இருபத்தைந்து பேர்களைக் கொண்ட குழுவை அமைத்து அவற்றை ஒத்திட்டுப் பரிசீலனை செய்யும்படி ஏற்பாடு செய்தார். இப்படி ஒத்திட்ட வேதங்களின் ஸம்ஹிதை பகுதிகளையும் நான்கு மஹா வாக்கியங்கள் பொதிந்துள்ள உபநிஷத் பகுதிகளையும் நாம் உத்தேசித்துள்ள புத்தகத்தில் சேர்ப்பது என்று முடிவு செய்தார் ஸ்வாமிகள்.

இதை அச்சேற்ற அவர் தனிமுறையில் ஏற்பாடுகள் செய்துள்ளார். காசியில் இதற்காக ஒரு தனி அச்சகம். அதில் தனியாக வார்க்கப்பட்ட நாகரி லிபி எழுத்துக்கள். இதை உபயோகித்து வேறு எந்தப் புத்தகமும் அச்சாகக் கூடாது என்று திட்டம். இதற்காகத் தயாரிக்கப்பட்ட தனிக் காகிதம். புத்தகத்தின் வடிவமும் தனி. இருபதுக்குப் பதினைந்து அங்குலம் நீள அகலமுள்ள வடிவம். சுமார் ஆயிரம் பக்கங்கள் உள்ளது. சுமார் இருபது கிலோ எடையுள்ளது.

ஆயிரம் பிரதிகள் மட்டுமே இந்த வேத நூல் அச்சாகியுள்ளது. இவற்றை விலைக்கு விற்பனை செய்யக் கூடாது என்பது ஸ்வாமிகளின் கண்டிப்பான உத்தரவு. மடங்களிலும், ஸம்ஸ்கிருத வித்யாசாலைகளிலும், நூல் நிலையங்களிலும், தர்ம சேவா நிலையங்களிலும் வேத நூலை ஸ்ரீ கங்கேச்வரானந்தா தாமே முன்னின்று தூப தீப நிவேதனங்களுடன் ஸ்தாபனம் செய்து வருகிறார்.

இம்மாதிரி இதுவரையில் 59 இடங்களில் இந்தியாவில் இவ்வேத நூல் ''வேத பகவானுக்கு ஜே'' என்ற கோஷத்துடன் ஸ்தாபிக்கப்பட்டுள்ளது. தென் தேசத்தில் பெங்களூர், ஹைதராபாத், திருப்பதி, சென்னை, மதுரை, திருவனந்தபுரம், காஞ்சி, கோவை முதலிய இடங்களிலும் ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது. சென்னையில் ஸிந்தி ஹிந்து தர்மசாலா சங்கத்தில் சென்ற பிப்ரவரி 24ந் தேதியன்று ஊர்வலமாக எடுத்துச் செல்லப்பட்டு, வேத நூல் ஸ்தாபிக்கப்பட்டது.

ஸ்ரீ கங்கேச்வரானந்தா ஸ்வாமியின் பெரு முயற்சியால் வேத மார்க்கம் மேன்மேலும் பிரகாசிக்கட்டும்!



# அழுக்கு நீங்க வழி



ஜகத்குரு ஸ்ரீகாஞ்சிகாமகோடி சங்கராசாரிய ஸ்வாமிகள்

ஞானத்துடன் — அறிவுடன் பார்த்தால் — எல்லாவற்றையும் ஆனந்தமாகவே பார்ப்போம். ஆனந்தம் முடிவில்லாதது. உண்மையாக அறிந்தால் எல்லாம் ஆனந்தம் என்று காண்போம். ஆனந்தம் எல்லையில்லாதது. அது இல்லாத இடமில்லை. ஞானமும் எல்லையில்லாதது. அதுவும் இல்லாத இடமில்லை. எல்லையில்லாத, எங்கும் நிறைந்த பொருள் இரண்டு இருக்க முடியாது. ஆகையால் ஆனந்தமும் ஞானமும் ஒன்று. உபநிஷத்தில் ஆனந்தம்தான் பிரம்மம் என்று சொல்லியிருக்கிறது. ஆனந்தம், ஞானம், பிரம்மம் எல்லாம் ஒன்றே.

நாம் கண்ணால் மட்டுமே பார்க்கிறோம். ஒன்றை ரோஜா என்கிறோம். இன்னொன்றை ஊமத்தை என்று சொல்கிறோம். ஞானம் என்கிற அறிவால் பார்த்தால் அது ரோஜா அன்று. ஆனந்தமாகத்தான் தெரியும். ஊமத்தம்பூவும் அப்படியே தெரியும். நமக்கு ஞானம் இல்லாதபடியால் ஒன்றை ரோஜாவாகவும், மற்றொன்றை இன்னொரு பொருளாகவும் பார்க்கிறோம். உண்மையில் எல்லாம் ஆனந்தந்தான். உண்மை நமக்குப் புலப்படாததற்குக் காரணம், நமக்குச் சித்தத்தில் அழுக்கு இருப்பதும் ஒருமைப்பாடு இல்லாததும்தான். கண்ணாடி ஆடிக் கொண்டிருந்தால், அதில் தெரியும் பிரதிபிம்பம் யதார்த்தமாக அல்லாமல் விரூபமாகத் தெரியும். ஆட்டத்துடன் அந்தக் கண்ணாடியில் அழுக்கும் இருந்தால் பிரதிபிம்பத்தில் யதார்த்த பாவமே கொஞ்சங்கூட இராது. நம்முடைய மனக் கண்ணாடி ஆடிக் கொண்டும், அழுக்குப் படிந்தும் இருப்பதால் பொருட்களை அது உள்ளபடி ஆனந்த வஸ்துவாகப் பிரதிபலிப்பதில்லை. பைத்தியம் பிடித்த ஒருவனிடம் 'இந்தத் தடியைக் கால் மணி நேரம் பிடித்துக் கொண்டே இரு' என்றால், அவனால் முடியாது. நம்மால் அந்தத் தடியைக் கால் மணி நேரம் பிடித்துக் கொண்டிருக்க முடிகிறது. ஸ்தூல வஸ்துவை நம்மால் பிடிக்க முடிகிறது. ஆனால் ஒரு பொருளைக் குறிப்பிட்ட நேரம் வரை **நினைத்துக்கொண்டு இரு** என்றால், அப்படிச் செய்ய முடியவில்லை. சித்தம் க்ஷணமே ஆயிரக்கணக்கான எண்ணங்களைச் சினிமாப் படங்கள் போவதுபோல் நினைக்கிறது. ஆகையால், நாம் எப்படிப் பைத்தியங்களை நினைக்கிறோமோ, அதுபோல் மகான்களுக்கு நாமும் பைத்தியமாகப்படுவோம். மனம் கட்டுப்படுகிற வரையில் எல்லாரும் பலவகைப்பட்ட பைத்தியங்களே. அழுக்குடனுள்ள கண்ணாடி ஆடுவதுபோல் நம்முடைய சித்தம் தோஷத்துடனும் ஏகாக்கிரதை இல்லாமலும் (ஒருமுகமாகாமலும்) இருப்பதுதான் இதற்குக் காரணம். தோஷம் போனால் ஏகாக்கிரதை வரும், ஏகாக்கிரதை வந்தால் உண்மை விளங்கும்.

தோஷத்தை எப்படிப் போக்குவது? நமக்கு அழுக்கு என்பது தேகம். இந்தத் தேகம் எதனால் வந்தது ? பாவத்தினால் வந்தது. அந்தப் பாவத்தை எதனால் செய்தோம்?



கரசரணாதி அவயவங்கள், மனம் இவற்றினால் செய்தோம். சுற்றியுள்ள கயிற்றைப் பிரிக்க வேண்டியிருந்தால், சுற்றின பிரகாரமே மறுபடியும் பிரிக்க வேண்டும். அதே மாதிரி அஸத்காரியங்களை ஸத்காரியங்களினாலும், பாவங்களைப் புண்ணியங்களினாலும் தொலைக்க வேண்டும். கரசரணாதி அவயவங்கள், மனம் இவற்றினால் செய்த பாவங்களை இந்த அவயவங்களினாலேயே தொலைக்க வேண்டும். தானம், தருமம் கர்ம அநுஷ்டானம், ஈசுவரநாமோச்சாரணம், ஈசுவர தரிசனம் முதலியவையே ஸத்காரியங்கள். பாவத்தைப் போக்குவதற்கு இவையே உபாயம்.

# அலை ஓசை

## 16. தேவி பராசக்தி

கதையோ கற்பனையோ என்று கிட்டாவய்யர் சந்தேகப்படும்படி ராஜம்மாள் கூறிய வரலாறு அத்துடன் முடியவில்லை. ராஜத்தையும் சீதாவையும் அதிசயக் கடலில் மூழ்க அடித்துவிட்டு அந்த ஸ்திரீ கீழே இறங்கிப் போன சில நிமிஷங்களுக்கெல்லாம் துரைசாமி வந்துசேர்ந்தார். ராஜத்தைப் பார்த்து, "இங்கு யாராவது வந்திருந்தார்களா என்ன? நான் மச்சுப்படி ஏறி வந்த போது ஒரு 'ஜெனானா' ஸ்திரீ, முகத்தை முக்காடு போட்டு மறைத்துக் கொண்டு தடதடவென்று இறங்கி ஓடினாளே!" என்றார்.

ராஜம் சீதாவைக் குறிப்பாக ஒரு பார்வை பார்த்துவிட்டு, "இங்கு ஒருவரும் வரவில்லையே!" என்றாள். "போகட்டும்; சாயங்கால வேளையில் நீ ஏன் படுத்திருக்கிறாய்? உனக்கு ஏதாவது உடம்பா, என்ன?" என்று கேட்டார் துரைசாமி. "அதெல்லாம் எனக்கு உடம்பு கிடம்பு ஒன்றுமில்லை. ஏதோ படபடவென்று வந்தது. படுத்துக்கொண்டேன்" என்றாள் ராஜம். துரைசாமி அருகில் வந்து ராஜத்தின் கன்னத்தைத் தொட்டுப் பார்த்தார். அவருடைய கை ஏன் இவ்வளவு ஜில்லிட்டிருக்கிறது என்று ராஜம் எண்ணினாள். "அசடே! உடம்பு ஒன்றுமில்லை என்கிறாயே! 103 டிக்ரி சுரம் இருக்கும் போலிருக்கிறதே! இதோ தெர்மா-மீட்டர் எடுத்துக் கொண்டு வருகிறேன்!" என்று துரைசாமி தம்முடைய அறைக்குச் சென்றார். அவர் அப்பால் போனதும் சீதா அம்மாவைத் தொட்டுப் பார்த்து விட்டு, "ஆம், அம்மா! அப்பா சொன்னது சரிதான்! உடம்பு கொதிக்கிறதே!" என்றாள். ராஜத்துக்கும் தனக்குச் சுரந்தான் என்று தெரிந்து விட்டது. உடனே ஒரு சந்தேகம் உதித்தது: சற்று முன் நடந்ததெல்லாம் சுரத்தின் வேகத்தில் தனக்குத் தோன்றிய பிரமையோ என்று எண்ணினாள். அந்த எண்ணம் அவளுக்கு மிக்க வேதனை அளித்தது. அவளுடைய முப்பத்தைந்து பிராயத்தில் இன்று ஒரு நாள் அவளுடைய வாழ்க்கை கதை போல் ஆகியிருந்தது. கதைகளில் நடப்பது போன்ற அதிசய சம்பவம் அன்று நடந்திருந்தது. அது பொய்யாய், கானல் நீராய், வெறும் பிரமையாய்ப் போவதாயிருந்தால் அவளுக்கு ஏமாற்றமாயிராதா?



சந்தேகம் தோன்றிய ஒரு நிமிஷ நேரத்துக் கெல்லாம் சந்தேகத்தைத் தீர்த்துக் கொள்ள வழி தோன்றியது. தலையணையடியில் கையை விட்டுத் துழாவிப் பார்த்தாள். ரூபாய் நோட்டுக் கத்தையும் ரத்தின ஹாரமும் கையில் தட்டுப்பட்டன. பிரமையல்ல, உண்மைதான் என்று நிச்சயம் செய்து கொண்டாள். சீதாவை அருகில் அழைத்து அணைத்துக்கொண்டு, ''சீதா! அப்பாவிடம் ஒன்றும் சொல்லாதே. காரணம் பிற்பாடு சொல்கிறேன்'' என்று காதோடு சொன்னாள். சீதாவும் குறிப்பை அறிந்து கொண்டு, ''சரி, அம்மா!'' என்றாள். துரைசாமி தெர்மாமீட்டர் கொண்டு வந்து வைத்துப் பார்த்தார். சுரம் 104 டிகிரி இருந்தது. ''ஏதோ இந்த வருஷத்துக்கு இன்னும் நீ படுத்துக் கொள்ளவில்லையே என்று பார்த்தேன். படுத்துக்கொண்டாயல்லவா?'' என்றார் துரைசாமி. பிறகு அவசரமாக டாக்டரை அழைத்து வரச் சென்றார்.

அன்று படுத்த ராஜம் இருபது நாட்களுக்கு மேல் ஆகியும் எழுந்திருக்கவில்லை. முதலில் 'இன்புளுயன்ஸா' என்றார் டாக்டர். ஐந்து நாட்கள் ஆன பிறகு ''டைபாய்டு என்று சந்தேகமாயிருக்கிறது; பார்க்கலாம்'' என்றார்.. பத்து நாட்கள் ஆன பிறகு, ''டைபாய்டு இல்லை; 'காலா ஹஸார்' என்று ஒரு புது சுரம் இப்போதெல்லாம் வருகிறது. ஒருவேளை அதுவாயிருக்கலாம்'' என்றார். ''கடைசியில், இது உடம்பைப் பற்றிய வியாதியே இல்லை; மனோ வியாதிதான்'' என்று முடிவு கூறினார். ஆயினும் தினம் தினம் மருந்து எழுதிக் கொடுப்பதை மட்டும் அவர் நிறுத்தவில்லை.

இவ்வளவையும் ஓரளவு அவநம்பிக்கையுடன் கேட்டுக் கொண்டிருந்த கிட்டாவய்யர், ''போதும் ராஜம்! நிறுத்து! பாக்கியை நாளைக்குச் சொல்லலாம்'' என்றார். இதற்குள் டாக்டருடன் மருந்துக் கடைக்குச் சென்ற துரைசாமியும் மருந்து வாங்கிக் கொண்டு வந்து சேர்ந்தார். முன்னதாக அவருடைய வரவைத் தெரிவித்துக்கொண்டே சீதா அந்த அறைக்குள்ளே பிரவேசித்தாள்.

தமது மனைவியும் மைத்துனரும் இருந்த நிலையைப் பார்த்து விட்டுத் துரைசாமி, ''அண்ணா அருமையாக வந்திருக்கிறீர்களே என்று மொச்சு, மொச்சு என்று பேசிக் கொட்டினாளாக்கும். அதிகமாகப் பேசக் கூடாது என்று டாக்டர் சொல்லியிருக்கிறார். அவள் பேசாதபடி நீங்கள்தான் பார்த்துக் கொள்ள வேண்டும். நான் சொன்னால் கேட்பதில்லை'' என்றார்.



கிட்டாவய்யர் தம் மனத்திற்குள், 'நல்ல வேலை நமக்கு இடுகிறாள். அகண்ட காவேரியில் வரும் வெள்ளத்தை அணை போட்டு நிறுத்து என்று சொல்வது போலிருக்கிறது!' என்று எண்ணிக் கொண்டார்.

வழக்கம் போல் அடுத்த நாளும் டாக்டர் வந்தார். தமக்குத் தொந்தரவு கொடுப்பதற்காகவே ராஜம் வியாதியாய்ப் படுத்துக் கொண்டாள் என்ற பாவத்துடனே வழக்கமான சோதனைகளைச் செய்தார். ''நான் சொன்னது சரிதான்; அண்ணா வந்ததில் தங்கைக்குக் கொஞ்சம் உடம்பு சௌகரியமாய்த்தான் இருக்கிறது!'' என்றார். ஆனாலும் காகிதமும் பேனாவும் எடுத்துப் பத்து விதமான மருந்துகளை வரிசையாக எழுதிக் கையெழுத்தும் போட்டுக் கொடுத்தார்.

அன்றைக்கும் டாக்டரின் காரில் துரைசாமி மருந்து வாங்கப் போன பிறகு, கிட்டாவய்யர், தங்கையின் சமீபத்தில் போய் உட்கார்ந்தார். ''ராஜம்! நீ அதிகமாகப் பேச வேண்டாம். ஆனால் ஒரு விஷயம் கேட்கிறேன். அதற்கு மட்டும் யோசித்துப் பதில் சொல்! நீ கொடுத்த பணத்தையும் நகையையும் சீதாவுக்காக உபயோகப்படுத்த வேண்டியதுதானா? அவை கிடைத்த விவரத்தைப் பற்றி நீ சொன்ன விவரம் அவ்வளவு திருப்திகரமாயில்லையே! ஏதாவது கோயில் குளம் அல்லது தர்ம காரியத்துக்குக் கொடுத்து விடுகிறேனே. சீதாவுக்கு நான் கல்யாணம் பண்ணி வைக்கிறேன். நீ அதைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம்! யாரோ வழியிலே போகிற ஸ்திரீ கொடுத்தது நமக்கு என்னத்திற்கு? அவள் யாரோ என்னமோ? எப்படி இந்தப் பணமும் நகையும் அவளுக்குக் கிடைத்தனவோ? அவள் கத்தியை வைத்து விட்டுத் திரும்பி வந்து எடுத்துப் போனதாக நீ சொன்னதெல்லாம் அவளைப் பற்றி என்னவெல்லாமோ சந்தேகத்தை உண்டாக்குகிறது. நன்றாக யோசித்துச் சொல்லு!'' என்றார்.



''நன்றாய் யோசித்து விட்டேன், அண்ணா! ஒருதடவைக்குப் பத்துத் தடவையாக யோசித்து விட்டேன். உன்னைப் போலவே நானும் ஏதாவது தான தர்மத்துக்குக் கொடுத்து விடலாமா என்று யோசித்தேன். பீஹார் பூகம்ப நிதிக்குக் கொடுத்து விடலாம் என்றுகூட எண்ணினேன். உனக்குத் தெரியும் அல்லவா அண்ணா? நீதான் பத்திரிகை படிக்கிறவன் ஆயிற்றே? எத்தனையோ பெரிய பட்டணங்கள் எல்லாம் ஒரே நிமிஷத்தில் மண்ணோடு மண்ணாகி விட்டனவாம். அங்கே ஜனங்களின் கஷ்டத்தைக் கேட்கச் சகிக்கவில்லை. அந்த நிதிக்குக் கொடுத்து விடலாமா இந்தப் பணத்தை என்று நினைத்தேன். ஆனால் அப்படிச் செய்ய மனம் வரவில்லை. அது சீதாவின் சீதனம் — வேறு விதமாகச் செலவழிக்க எனக்குப் பாத்தியதை இல்லை என்று தோன்றியது. பூகம்ப நிதிக்கு நீ ஏதாவது கொடுத்தாயா அண்ணா?'' என்று கேட்டாள்.

''அதெல்லாம் பெரிய விஷயம் அம்மா! நீயும் நானும்

கொடுத்துத்தானு ஆகப் போகிறது?'' என்ருர் கிட்டாவய்யர்.

''அப்படி யில்லே. ஏதோ நாமும் மனுஷ ஜன்மம்தான் என்று காட்டிக் கொள்ள வேண்டாமா? நம்மாலானதை நாம் செய்கிறது!''

''ஆகட்டும்; அப்படியே செய்யலாம். சீதாவின் விஷயத்தை இப்போது பேசி முடிக்கலாம்; அந்தப் பணத்தையும் நகையையும்...''

''சீதாவுக்குக் கிடைத்த அந்தச் சீதனம் சாதாரணச் சீதனமல்ல. அத்துடன் தெய்வத்தின் ஆசீர்வாதமும் சேர்ந்திருக்கிறது, அண்ணு!''

''அது எப்படிச் சொல்கிருய்? அந்த ஸ்திரீ யார், எப்படிப்பட்டவள் என்று எதுவும் தெரியவில்லேயே!''

ராஜம் சற்று நேரம் கண்ணே மூடிக் கொண்டு சிந்தனேயில் ஆழ்ந்திருந்தாள். பிறகு கண்ணேத் திறந்து கிட்டாவய்யரை ஏறிட்டுப் பார்த்து, ''அந்த ஸ்திரீ யார் என்று எனக்குத் தெரியும், அண்ணு!'' என்ருள்.

''தெரியுமா? பின்னே ஏன் யாரோ என்று சொன்னுய்? அவள் யார்?''

''இத்தனே நாட்களாக அவள் யார் என்று தெரியவில்லே. அதனுல் யாரோ என்றேன். நேற்று இரவு நான் கண்ட கனவிலே அந்த ஸ்திரீ இன்னுர் என்று தெரிந்தது.''

''அப்படியா, அம்மா! யார் என்று தெரிந்தது?''

''அவள் 'தேவி பராசக்தி' அண்ணு! என்னுடைய இருபது வருஷப் பிரார்த்தனே வீண் போகவில்லே'' என்ருள் ராஜம். அவளுடைய கண்களில் ஆனந்த பாஷ்பம் பெருகியது.

இதனுல் கிட்டாவய்யருடைய மனம் இன்னும் அதிகமாகக் குழம்பியது. ''டாக்டர் சொன்னது உண்மைதான் போலிருக்கிறது. இவளுக்கு மனத்திலே தான் ஏதோ கோளாறு ஏற்பட்டிருக்க வேண்டும்'' என்று சொல்லிக் கொண்டார். உடம்பா யிருந்தாலும் மனமா யிருந்தாலும் சீக்கிரத்தில் ராஜத்தைக் குணப்படுத்தி அருளும்படி அவருடைய குலதெய்வத்தை வேண்டிக்கொண்டார்.

அதற்கு மறுநாளும் டாக்டர் வந்தார். வழக்கம்போல் சோதனே செய்து பார்த்தார். ''இன்றைக்கு இன்னும் கொஞ்சம் பரவாயில்லே!'' என்ருர். பிறகு 'பிரிஸ்கிருப்ஷன்' எழுதுவதற்காகக் கையில் காகிதமும் பேனுவும் எடுத்தார். ஆனுல் ஒன்றும் எழுதவில்லே. திடீரென்று ஏதோ தோன்றியவரைப் போல் காகிதத்தையும் பேனுவையும் கீழே வைத்தார்.

''மிஸ்டர் துரைசாமி! ஒரு விஷயம் சொல்லட்டுமா?'' என்ருர்.

''பேஷாகச் சொல்லுங்கள்! கேட்பானேன்?'' என்ருர் துரைசாமி.

''உங்கள் சம்சாரத்துக்கு இனிமேல் இந்த மருந்துகளினுலெல்லாம் உபயோகமில்லே!''

''பின்னே என்ன மருந்து உபயோகம்? ஆயுர்வேதம் பார்க்கலாம் என்கிறீர்களா?''

''ஆயுர்வேதத்துக்குப் போனுல் அவ்வளவுதான். இந்த அம்மாளே யமனிடம் ஒப்புவிக்கிற மாதிரிதான்!''

''பின்னே என்ன சொல்கிறீர்கள்?''

''உங்கள் மனேவிக்கு இப்போது கொடுக்க வேண்டிய மருந்து இடமாறுதல்தான். இந்த பம்பாய் நகரத்தில் இருபது வருஷங்களாக இருந்திருக்கிருர்கள் அல்லவா? வேறு ஊருக்குப் போய்ச் சில நாட்கள் இருந்துவிட்டு வரட்டும். உங்கள் மைத்துனர் கிட்டாவய்யர் கிராமவாசிதானே? அவரோடு கூட்டி அனுப்புங்களேன்!''

''எனக்குக் கொஞ்சங்கூட ஆட்சேபமில்லே. கிட்டாவய்யர் அழைத்துப் போவதா யிருந்தால்.....''

''அழைத்துப் போவதாயிருந்தால் என்ன? திவ்வியமாக அழைத்துப் போகிறேன். போன வருஷமே அழைத்துப் போகிறேன் என்று சொன்னேன். இவர்தான் அனுப்பவில்லே....''

''நானு அனுப்பவில்லே? உங்கள் தங்கைதான் 'போக மாட்டேன்' என்று பிடிவாதம் பிடித்தாள்.''

## ஐயப்பன் திருப்பணி

ஐயப்பன் என்றும் ஹரிஹர புத்திரன் என்றும் பிரசித்திபெற்றுள்ள ஸ்ரீசாஸ்தாவுக்குத் திருச்சி மாவட்டத்தில் சீழாநிலேக் கோட்டைக்கு அருகே உள்ள மாங்குடி வயலில் ஒரு புராதனமான ஆலயம் உள்ளது. வரப்பிரஸாதமாகக் கருதப்படும் இம் மூர்த்தி பூரணமான பக்தர்களுக்குக் குலதெய்வமாக விளங்குபவர். இந்தப் பழைய ஆலயம் இப்போது ஜீர்ணேத்தாரணம் செய்யப்படுகிறது. திருப்பணிக் கைங்கரியத்தில் பங்குகொள்ள விரும்புவோர் கீழ்க்காணும் விலாசத்துக்குப் பொருள் அனுப்பலாம்: ஸ்ரீ ஆர். ஸ்ரீராம், மாங்குடிவயல் சாஸ்தா திருப்பணிக் குழு, 1753-56, மானேஜிப்பா தெரு, தஞ்சை.

''இந்த வருஷமும் அதையேதான் சொல்கிறேன்!'' என்றாள் ராஜம்மாள்.

''இந்தப் பிடிவாதம் உனக்கு ஆகாது, அம்மா! ஊர் மாறுவிட்டால் உனக்கு உடம்பு குணமாகாது.''

''டாக்டர்! இருபது வருஷங்களாக இந்த இடத்தில் இருந்துவிட்டேன். பாக்கி இருக்கும் சில நாட்களும் இங்கேயே இருந்து விடுகிறேன்.''

''அப்புறம் உங்கள் இஷ்டம்; நான் என்ன சொல்லட்டும்?'' என்று டாக்டர் கூறி மறுபடியும் காகிதத்தையும் பேனாவையும் எடுத்து வரிசையாக மருந்துகளை எழுதினார்.

## 17. துரைசாமியின் இல்லறம்

டாக்டருடைய யோசனை ராஜத்தைத் தவிர மற்ற எல்லாருக்கும் பிடித்தமாயிருந்தது. கிட்டாவய்யர் ராஜத்தைத் தம்முடன் ஊருக்கு வரும்படி அடிக்கடி வற்புறுத்தினார். அவருடன் சேர்ந்து துரைசாமியும் சொன்னார். இந்த இருவரையுடம் விட அதிகமாகச் சீதா தன் தாயாரிடம் மன்றாடினாள். ''ஊருக்குப் போய் வரலாம் அம்மா! எனக்கு லலிதாவைப் பார்க்க வேண்டும் போலிருக்கிறது!'' என்பதாக நிமிஷத்துக்கொரு தடவை சொல்லிக் கொண்டிருந்தாள். ஆனால், ராஜம்மாள் இதற்கெல்லாம் இணங்குவதாக இல்லை.

இரண்டு மூன்று நாளைக்குப் பிறகு துரைசாமியின் சுபாவத்தில் ஒரு மாறுதல் காணப்பட்டது. கிட்டாவய்யர் வந்த புதிதில் சாந்தமாகவும் எல்லாரிடமும் பிரியமாகவும் இருந்தவர் திடீரென்று வெறி கொண்டவர் போல் காணப்பட்டார். வீட்டில் அதிகமாகத் தங்குவதில்லை. யாருடனும் பேசுவதில்லை. ராஜத்தின் உடம்பைப் பற்றிக் கவனிப்பதில்லை; சீதாவின் பேரிலும் எரிந்து விழுந்தார். பாத்திரங்களையும் சாமான்களையும் 'தடார் படார்' என்று வீசி எறிந்தார்.

ஒரு நாள் இரவு ராஜம் படுத்திருந்த அறைக்குள்ளே பெரிய ரகளை நடந்தது. துரைசாமியும் ராஜமும் முதலில் சாவதானமாகப் பேசத் தொடங்கினார்கள். கிட்டாவய்யரும் சீதாவும் இன்னொரு அறையில் படுத்துக் கொண்டிருந்தார்கள். ஆனால் அவர்கள் தூங்கவில்லை. துரைசாமிக்கும் ராஜத்துக்கும் நடந்த சம்பாஷணை அரைகுறையாக அவர்களுடைய காதில் விழுந்து கொண்டிருந்தது.

சற்று நேரத்துக்குள் சம்பாஷணையின் ஸ்வரம் ஏறியது. வார்த்தைகள் வரவரக் கடுமையாயின.

''நான் செத்துப் போனால் உங்களுக்குச் சந்தோஷமாக இருக்கும்!''

''ஒரு வழியாகச் செத்துத் தொலைந்து போய்விடேன்! உயிரோடிருந்து ஏன் என் பிராணனை வாங்குகிறாய்?''

—இப்படிப்பட்ட கொடூரமான பேச்சுக்கள் கேட்டன.

கிட்டாவய்யருக்குத் தன் மனைவியின் சுபாவத்தில் சில நாட்களாக ஏற்பட்டிருந்த மாறுதல் ஞாபகத்துக்கு வந்தது. அதைப் பற்றி அவர் மிகவும் வருத்தப்பட்டுக் கொண்டிருந்தார். இப்போது அவர் இந்த தம்பதியின் இல்வாழ்க்கையைக் காட்டிலும் தம் இல்வாழ்க்கை எவ்வளவோ மேலானது அல்லவா என்று எண்ணித் திருப்தி அடைந்தார்.

திடீரென்று ராஜத்தின் அறையில் 'பட், பட், பட்' என்று சத்தம் கேட்டது. ''ஐயோ! வேண்டாமே! ஐயோ! வேண்டாமே!'' என்று ராஜம் அலறினாள். ராஜத்தைத் துரைசாமி அடித்துக் கொல்லுகின்றார் என்று நினைத்துக் கொண்டார் கிட்டாவய்யர். 'நிலைமை மிஞ்சி விட்டது. இனித் தாம் சும்மா படுத்துக் கொண்டிருக்கக் கூடா'தென்று ஒரு நொடியில் தீர்மானித்து, விழுந்தடித்துக்கொண்டு ஓடினார். அறைக் கதவு வெறுமனே சாத்தியிருந்தபடியால் திறந்துகொண்டு உள்ளே பிரவேசித்தார்.

அறைக்குள் அவர் கண்டது அவர் நினைத்ததற்கு மாறாக இருந்தது. துரைசாமி ராஜத்தை அடிக்கவில்லை. அவர் தம்முடைய தலையிலேதான் 'பட், பட், பட்' என்று போட்டுக்கொண்டிருந்தார். அதை நிறுத்துவதற்குத்தான் ராஜம், ''வேண்டாமே! வேண்டாமே!'' என்று கத்தினாள்.

அந்த ஒரு கண நேரத்தில் கிட்டாவய்யருக்கு ஒரு பெரிய உண்மை புலனாயிற்று. வீட்டின் ஒரு சிறிய பலகணியின் வழியாக வெளியே பார்த்தால் விஸ்தாரமான மைதானமும் தொலை தூரத்தில் உள்ள மரங்களும் மலைத் தொடர்களும் மலைச் சிகரத்துக்கு மேலே வானில் உலாவும் மேகங்களும் தெரிவது போலக் கிட்டாவய்யருக்கு இந்த ஒரு சம்பவத்திலிருந்து அந்தத் தம்பதிகளின் இருபது வருஷத்து இல்வாழ்க்கையின் இயல்பு தெரிய வந்தது. இது வரையில் மாப்பிள்ளை துரைசாமி தன் சகோதரியைக் கொடுமைப்படுத்துவ



மகரிஷி எழுதும்

# மண் புழு

இம் மாத நாவல்
26.3.1972

வதாக அவர் நினைத்து ராஜத்தினிடம் இரக்கப்பட்டுக் கொண்டிருந்தார். இப்போது கொடுங்கோன்மை செலுத்துவது உண்மையில் ராஜம்தான் என்பதை அறிந்து துரைசாமியிடம் அவர் இரக்கம் கொண்டார்.

கிட்டாவய்யரைக் கண்டதும் துரைசாமி தம் தலையில் அடித்துக் கொள்வதைச் சட்டென்று நிறுத்தினார். ராஜமும் அலறுவதை நிறுத்தினாள்.

துரைசாமியின் அருகில் சென்று கிட்டாவய்யர் உட்கார்ந்து ''மாப்பிள்ளை! இப்படிச் செய்யலாமா?'' என்று சாந்தமான குரலில் கூறினார். இதற்குப் பதிலாகத் துரைசாமி சத்தம் போட்டுக் கத்தினார்.

''ஆமாம், ஸார்! 'இப்படிச் செய்யலாமா, அப்படிச் செய்யலாமா?' என்று என்னிடம்தான் சொல்வீர்கள். இவளுடைய மூடப் பிடிவாதத்தை மாற்ற உங்களால் முடியவில்லை யல்லவா? 'ஊர் மாறினால்தான் இவள் பிழைப்பாள்' என்று டாக்டர் கண்டிப்பாகச் சொல்கிறார். இவள் என்ன சொல்கிறாள் தெரியுமா? என் காலடியிலே விழுந்து செத்துப் போக வேண்டுமாம்! அப்போதுதான் இவளுக்கு நல்ல கதி கிடைக்குமாம்! இவளுடைய எண்ணம் எப்படி இருக்கிறது, பாருங்கள்! குழந்தை சீதாவுக்குக் கல்யாணம் செய்து பார்க்கவேண்டுமே என்ற ஆசைகூட இவளுக்குக் கிடையாது. 'செத்துப் போகிறேன், செத்துப் போகிறேன்' என்று இருபத்துநாலு மணி நேரமும் இதுவே ஜபம்!-உண்மையாகவே இவள் செத்துத் தொலைந்து போய் விட்டால் தாயில்லாப் பெண்ணை வைத்துக் கொண்டு நான் என்ன செய்கிறது? சீதாவுக்குக் கல்யாணம் செய்து வைத்து இவள் போய்த் தொலைந்தாலும் பாதகமில்லை!''

இந்தச் சண்டமாருதப் பேச்சுக்கு முன்னால் என்ன பதிலைச் சொல்வது என்று கிட்டாவய்யர் திகைத்து நிற்கையில் ராஜம்மாள் அவருடைய உதவிக்கு வந்தாள். மூச்சு வாங்கிக் கொண்டே அவள் பேசினாள்:

''நான் உன்னுடன் ஊருக்கு வருகிறேன் அண்ணா! நாளைக்கே புறப்படத் தயார். நான் இந்த வீட்டில் இருந்து இவர் காலடியில் நிம்மதியாகச் சாவது இவருக்குப் பிடிக்கவில்லை. அங்கே மன்னியிடம் இடிபட்டுப் பேச்சுக் கேட்டுத்தான் சாக வேண்டுமாம். அகண்ட காவேரிக் கரையிலேதான் என்னை வைத்துக் கொளுத்த வேண்டுமாம்!...''

''ராஜம்! என்ன இப்படி உளறுகிறாய்? உனக்கு மூளை அடியோடு பிசகிவிட்டதா! ராஜம்பேட்டையில் இருக்க உனக்கு இஷ்டம் இல்லாவிட்டால் உன் தமக்கை வீடு பக்கத்து ஊரில் இருக்கிறதே, அங்கே இருக்கலாமே? உன் பேரில் எங்களுக்கெல்லாம் என்ன விரோதமா? டாக்டர் சொன்னபடி யினால்தானே எல்லோரும் வற்புறுத்துகிறோம்? கொஞ்சம் மனசைச் சாந்தப் படுத்திக் கொண்டு யோசித்துப் பேசு அம்மா!'' என்றார் கிட்டாவய்யர்.

''சாந்தமாக' யோசித்துத்தான் சொல்லுகிறேன், அண்ணா! ஏதாவது தப்பாகச் சொல்லி யிருந்தால் மன்னித்துக்கொள்! நான் உன்னோடு புறப்பட்டு வருகிறேன்! நிச்சயமாகத்தான் சொல்கிறேன்'' என்றாள் ராஜம்.

''இவளுடைய பிடிவாதத்துக்கு என்ன காரணம் தெரியுமா, ஸார்! இவள் இங்கே இருந்துதான் என்னைக் காப்பாற்றிக் கொண்டிருக்கிறாளாம். இல்லாவிட்டால் நான் குடித்துக் கெட்டுக் குட்டிச்சுவராய்ப் போய்விடுவேனாம்! அப்படி இவள் மனத்துக்குள்ளே எண்ணம்! அவ்விதமெல்லாம் நான் கெட்டுப் போகிறவனா யிருந்தால் இவளால் என்னைத் தடுத்துவிட முடியுமா?''

''நான்தான் ஊருக்குப் புறப்படுகிறேன் என்று சொல்லி விட்டேனே! இன்னும் என்னத்துக்காக இந்தப் பேச்செல்லாம்? அண்ணா! நீ போய்ப் படுத்துக்கொள்!.... சீதா! சீதா!'' என்று ராஜம் கூவினாள்.

''ஏன் அம்மா!'' என்று வெளியிலிருந்தே சீதா கேட்டாள்.

# வளரும் குழந்தைகளுக்கு
# இனிய போர்ன்விடா!

சக்தி வளரட்டும்! பள்ளியிலும்
விளையாட்டிலும், இன்றும் என்றுமே,
வெற்றி அவனுக்கே. ஆம்! அவன்
சுவைத்துப் பருகுவது போர்ன்விடா.
ஊட்டமளிக்கும் **கோகோ,** பால்
மால்ட், சர்க்கரை இவை இனிதே
கலந்திட்ட போர்ன்விடாவிலே அடங்கி
யுள்ளது அவனுடைய ஒளிமிக்க
எதிர்காலம்.






SHB-7379-TM

**சக்திக்கும் வலிமைக்கும்—மற்றும் தீஞ்சுவைக்கும் *காட்பரிஸ்* போர்ன்விடா!**

''இன்னும் விழித்துக் கொண்டுதான் இருக்கிறாயா? இங்கே வா, அம்மா!'' என்றாள் ராஜம்.

சீதா குதித்துக் கொண்டு உள்ளே வந்தாள். அவள் முகம் மலர்ந்திருந்தது. அப்பாவும் அம்மாவும் இந்த மாதிரி சண்டை போடுவது வெகு சகஜமாகையால் அதைப் பற்றி அவள் கவலைப்படவில்லை. சண்டையின் முடிவாக ஊருக்குப் போகிற விஷயம் முடிவானது அவளுக்கு அளவில்லாத குதூகலத்தை அளித்திருந்தது.

''சீதா! உன்னுடைய பிரார்த்தனை நிறைவேறி விட்டது. ஊருக்குப் போக வேண்டும், லலிதாவைப் பார்க்க வேண்டும் என்று வாய் ஓயாமல் சொல்லிக் கொண்டிருந்தாயே? கடைசியாக நாம் ஊருக்குப் போகிறதென்றே தீர்மானமாகிவிட்டது. உனக்கு சந்தோஷம் தானே?'' என்றாள் ராஜம்.

''ரொம்ப சந்தோஷம், அம்மா!'' என்றாள் சீதா.

அன்று இரவிலிருந்து ராஜத்தின் உடம்பு விரைவாகத் தேறி வந்தது. கிட்டாவய்யர் பம்பாய்க்கு வந்த எட்டாவது நாள் அவரும் ராஜம்மாளும் சீதாவும் விக்டோரியா டெர்மினஸ் ஸ்டேஷனில் மதராஸ் மெயிலில் ஏறினார்கள். துரைசாமி ஸ்டேஷனுக்கு வந்து டிக்கட் வாங்கிக் கொடுத்து அவர்களை ரயில் ஏற்றிவிட்டார்.

விக்டோரியா டெர்மினஸ் ஸ்டேஷன் அமளி துமளிப் பட்டுக் கொண்டிருந்தது. பன்னிரண்டு பிளாட்பாரங்களில் ஏக காலத்தில் ரயில் வண்டிகள் வரும் சத்தமும், புறப்படும் சத்தமும் வண்டிகள் கோக்கப்படும் சத்தமும், ஆயிரக்கணக்கான பிரயாணிகள் பல பாஷைகளில் சம்பாஷிக்கும் சத்தமும், 'சாவாலா'க்களின் கூவலும், 'பாணி வாலா'க்களின் கூக்குரலும், போர்ட்டர்'களின் ஆர்ப்பாட்டமும், பத்திரிகைச் சிறுவர்களின் ஆரவாரமும் சேர்ந்து காது செவிடுபடும்படியான பெரும் கோஷமாக எழுந்து கொண்டிருந்தன. வெள்ளைக்காரர்களும் வெள்ளைக்காரிச்சிகளும், குஜராத்தியர்களும், மராட்டியர்களும், பார்ஸிகளும், மதராஸிகளும் ஆண்களும் பெண்களும் குழந்தைகளும் கிழவர்களும் ஒருவரோடொருவர் மோதி இடித்துக் கொண்டு அங்குமிங்கும் ஓடிக் கொண்டிருந்தார்கள்.

ஆனால் இந்தக் காட்சிகள் ஒன்றிலும் ராஜத்தின் கவனம் செல்லவில்லை. அவ்வளவு சத்தங்களிலே எதுவும் அவளுடைய காதில் விழவும் இல்லை.

அவளுடைய இரு கண்களும் துரைசாமியின் மீது ஏகாக்கிர பாவத்துடன் படிந்திருந்தன. துரைசாமி சொன்ன வார்த்தைகளையே அவளுடைய காதுகள் கேட்டுக் கொண்டிருந்தன.

ரயில் புறப்படும் சமயத்தில் கிட்டாவய்யர் ரயில் வண்டியின் கதவு அருகில் நின்று துரைசாமியுடன் பேசிக் கொண்டிருந்தார். ஆனால் பேசிக் கொண்டிருந்தபோதே அவருடைய கவனம் வேறு பல விஷயங்களின்மீது சென்று கொண்டிருந்தது. முக்கியமாக, பத்திரிகை விற்ற பையன்கள் கூக்குரல் போட்டுக் கத்திய ஒரு விஷயம் அவர் காதில் விழுந்து மனத்தில் பதிந்தது. ''ரஜனிப்பூர் மகாராஜாவைக் கொல்ல முயற்சி'' ''ஒரு பெண் பிள்ளையின் சாகஸம்'', ''கையில் கத்தியுடன் கைது செய்யப்பட்டாள்'' என்று அந்தப் பத்திரிகை விற்ற பையன்கள் ஆங்கிலத்திலும் ஹிந்துஸ்தானியிலும் கூச்சலிட்டார்கள். கிட்டாவய்யர் தமக்குத் தெரிந்த இங்கிலீஷ் ஞானத்தைக் கொண்டு விஷயத்தை ஒருவாறு அறிந்துகொண்டார். துரைசாமியுடன் பேசிக் கொண்டிருந்தபோதே, ''இது என்ன மகாராஜா கொலை விஷயம்?'' என்று கேட்டார். ''பம்பாயில் இந்த மாதிரி எவ்வளவோ நடக்கும். நமக்கென்ன அதைப் பற்றி?'' என்று துரைசாமி கூறியபோது அவருடைய முகம் கறுத்துச் சுருங்குவதைக் கிட்டாவய்யர் கவனிக்கும்படி நேர்ந்தது.

இதற்குள்ளே வண்டி புறப்படும் நேரம் வந்துவிட்டது. ரயில் நகரத் தொடங்கிய பிறகு துரைசாமி உணர்ச்சி மிகுந்த குரலில் உரத்த சத்தம் போட்டுக் கூறியதாவது: ''ராஜம்! கூடிய சீக்கிரம் நான் அங்கே வந்து உங்களைத் திருப்பி அழைத்துக் கொண்டு வருகிறேன். வீண் கவலைப்படாதே! நான் சரியாக இருப்பேன்! சீதா! அம்மாவைச் சரியாகப் பார்த்துக்கொள்! நான் சொன்னதெல்லாம் ஞாபகமிருக்கட்டும். கிட்டாவய்யர் போய் வருகிறீர்களா? ஜாக்கிரதை! ரயில் வண்டியின் உட்புறம் தாழ்ப்பாள் போட்டுக்கொள்ளுங்கள்! ராஜம் உடம்பு ஜாக்கிரதை.''

துரைசாமி உண்மையாகவே தான் அவ்விதமெல்லாம் சொன்னார். ''சீக்கிரத்தில் ஊருக்கு வந்து உங்களை அழைத்து வருகிறேன்'' என்று அவர் கூறியதும் மனப் பூர்வமாகத்தான். ஆனால் மனிதன் ஒருவிதத் திட்டம் போட்டிருக்க, விதி வேறு விதமாகத் திட்டம் போடுகிறதை உலகில் பார்க்கிறோமல்லவா?

(தொடரும்)

# பத்தாண்டில் பிறக்கும் குழந்தைகள் பத்திரிகை



# கோகுலம்

குழந்தைகளுக்குக் கல்கி தரும் பரிசு

அடேயப்பா! குழந்தைகள் பத்திரிகைக்குத்தான் எத்தனை எத்தனை பெயர்கள்? அத்தனையையும் பார்க்கப் பார்க்கத் தமிழ் நாட்டுக் குழந்தைகளாகிய உங்கள் கற்பனையைக் கண்டு வியந்தே போனேன். நீங்கள் எழுதியுள்ள அத்தனை பெயர்களிலுமே பத்திரிகைகள் வெளியிடலாம். இயற்கையின் எழிற் காட்சிகள், மிருகங்களின் பெயர்கள், பூக்கள், பறவைகள், வண்டுகள், தின்பண்டங்களின் பெயர்கள் — அப்பப்பா! என்ன கற்பனை, என்ன ஆர்வம்! அது மட்டுமா? ஒவ்வொருவரும் தாங்கள் சூட்டியிருக்கும் பெயருக்கான காரணங்களை விளக்கி எழுதியுள்ள அந்த அழகே தனி. நூற்றுக்கணக்கான பெயர்களைப் பட்டியலாக்கிக் கொடுத்துள்ள குழந்தைகளோ ஏராளம், ஏராளம்!

பெயர் சூட்டும் போட்டிக்கு வந்த கடிதங்களின் எண்ணிக்கை மட்டும் ஆறாயிரத்துக்கும் அதிகமாகும். இது கடிதங்களின் எண்ணிக்கைதான்! ஆனால் பல குழந்தைகள் கூட்டணி அமைத்துக்கொண்டு ஒரே கடிதத்தில் பல பெயர்களை வாரி வழங்கியுள்ளார்கள். இப்படிப் பார்க்கும்போது இப் போட்டியில் எத்தனை குழந்தைகள் கலந்துகொண்டன, அவர்கள் கூறியுள்ள மொத்தப் பெயர்கள் எவ்வளவாக இருக்கும் என்பதை நீங்களே கணக்குப் போட்டுப் பார்த்துக் கொள்ளுங்களேன்!

ஆசிரியர் குழுவுக்கு, இத்தனை அழகான பெயர்களில் எந்தப் பெயரைத் தேர்ந்தெடுப்பது என்பதில் பெரிய குழப்பமே ஏற்பட்டு விட்டது. ஒரு தடவையல்ல, பலதடவைகள் மாற்றி மாற்றிப் பரிசீலனை செய்து முடிவாக

**‘கோகுலம்’**

என்ற பெயரைத் தேர்ந்தெடுத்தோம். இதனால் மற்ற குழந்தைகள் எழுதிய பெயர்கள் எல்லாம் நன்றாக இல்லை என்பது பொருளல்ல. ஏதாவது ஒரு பெயரைத்தானே வைக்க முடியும்?

கோகுலம் என்றதும் உங்கள் எல்லோருடைய கற்பனையிலும் வந்து நிற்பது பாலகிருஷ்ணனின் உருவம்தானே? வெண்ணெயுண்ட வாயனான அவன் ஆயர்பாடியில் ஆடிப் பாடி அற்புத லீலைகள் நிகழ்த்திய இடம் கோகுலம்தானே? கண்ணனின் லீலைகளை எத்தனை முறை படித்தாலும், எப்போது படித்தாலும் எப்படி அலுப்போ சலிப்போ ஏற்படாதோ அப்படியே உங்களுக்காக நடத்தப்பட விருக்கும் இந்தக் ‘கோகுலம்’ பத்திரிகையும் திகட்டாத விருந்தாக, தித்திக்கும் தேனாக விளங்கப் போகிறது என்பதைச் சொல்லுவதில் பெருமையடைகிறேன்.

''அது சரி, 'கோகுலம்' என்ற பெயரைச் சூட்டிய குழந்தைகள் யார்?'' என்று ஆர்வத்துடன் நீங்கள் கேட்பது என் காதில் விழுகிறது. உங்கள் சகோதர சகோதரிகளில் பதின்மூன்று பேர்கள் இந்தப் பெயரைக் குறிப்பிட்டு எழுதி இருக்கிறார்கள். ஆகவே ஆறு கொழுக்கட்டைக்குப் பதிலாகப் பதின்மூன்று கொழுக்கட்டைகள் செய்து இந்தப் பதின்மூன்று குழந்தைகளுக்கும் கொடுத்து விடுவது என்று முடிவு செய்திருக்கிறோம்.

பொற்காசுக் கொழுக்கட்டையைப் பெறப்போகும் குழந்தைகள் இவர்கள்தான்: . . . . ▶

பரிசுக் கொழுக்கட்டை உங்களுக்குக் கிடைக்காவிட்டாலும் உங்கள் சகோதர சகோதரியர் பரிசு பெறுவதைக் கண்டு நீங்கள் கைதட்டி மகிழ்ச்சி ஆரவாரம் செய்வது என் காதுகளில் விழுகிறது.

இன்னொரு சந்தோஷமான சமாசாரத்தையும் இங்கு குறிப்பிட்டாக வேண்டும். புதிய பத்திரிகைக்குப் பெயர் சூட்டு முன்பாக, பத்திரிகையின் சந்தா எவ்வளவு என்று நாங்கள் தெரிவிக்கும் முன்பாக, பத்திரிகை வெளிவரப் போகிறது என்ற அறிவிப்பைக் கண்டதுமே, 'கல்வி ஸ்தாபனத்திலிருந்து வெளிவரும் குழந்தைகள் பத்திரிகையா? அப்படியானால் அது தரத்தில் கட்டாயம் உயர்ந்திருக்கும். பயமில்லாமல் அதை வரவழைத்துக் குழந்தைகளின் கையில் தரலாம்' என்ற பூரண திருப்தியோடு, உடனே எங்களுக்கு ஒரு குறிப்பிட்ட தொகையை முன்னதாகவே சில அன்பர்கள் தங்கள் சந்தாவாக அனுப்பி இருக்கிறார்கள். இப்படி அனுப்பியவர்களில் முதலில் அனுப்பியவர் பெயர் **திரு ஸ்ரீநிவாஸன்**; இரண்டாவதாக அனுப்பியவரின் பெயர் **செல்வி ஆண்டாள்**.

கண்ணன் விளையாடிய புனித பதியாகிய கோகுலத்தின் பெயரைக் கொண்டுள்ள பத்திரிகைக்கு, கண்ணனின் அம்சமான ஸ்ரீநிவாஸப் பெருமாளும், கண்ணனை மணந்த ஆண்டாளுமே முதல் சந்தா அனுப்பியதால் இதையே ஒரு சுப சூசகமாகக் கொண்டு தமிழ் கூறும் நல்லுலகக் குழந்தைகளின் நல்லொழுக்கத்தையும் நல்வாழ்வையும், மகிழ்ச்சியையும் வளர்க்கப் பாடுபடும் பணியில் 'கோகுல'த்தை அர்ப்பணித்துக் கொள்ளுகிறேன். குழந்தைகளின் சொந்தப் பத்திரிகையான கோகுலம் தமிழ்ப் புத்தாண்டு தினத்திலிருந்து மாதம் இருமுறை வந்து உங்களை எல்லாம் மகிழ்விக்கும்.

— ஆசிரியர்

**கோகுலம்**

**தனிப் பிரதி விலை 30 காசு**
**ஆண்டுச் சந்தா ரூ. 7-00**
**ஆறுமாதச் சந்தா ரூ. 3-50**

நிர்வாகி, கோகுலம், கல்விப் பூங்கா, சேத்துப்பட்டு, சென்னை—31 என்ற விலாசமிட்டுத் தொகை அனுப்புவதற்கு இன்று முதலே உங்கள் பெற்றோர்களுக்கு நினைவுபடுத்துங்கள்.



1. ஜே. வைத்தியநாதன்
   ஐந்தாம் வகுப்பு 'B' பிரிவு
   தேசிய ஆரம்பப் பள்ளி, மாயூரம்

2. எஸ். முரளிதரன்
   9, ரெட்டியப்ப முதலியார் வீதி
   கொசப்பேட்டை,
   வேலூர்

3. குமாரி எஸ். ஸரோஜா
   1, வடக்கு ரத வீதி
   துறையூர், திருச்சி

4. ஆர். இந்திரா
   E/217 சந்தானு வீதி
   டி. வி. எஸ். நகர்
   மதுரை-3

5. பு. சுலோசனா
   c/o வி. புருஷோத்தமன்
   50, கே. பி. கோயில் தெரு
   சைதை, சென்னை-15

6. ந. சிவஞானம்
   21, போலீஸ் ஸ்டேஷன் தெரு
   பாளையங்கோட்டை
   திருநெல்வேலி-2

7. கே. வி. கமலா
   c/o ஜெ. வேம்பு
   அரசினர் தொலைபேசி நிலையம்
   பழனி, மதுரை மாவட்டம்

8. கூ. ராமச்சந்திரன்
   பெரிய தெரு
   பாண்டிக்குடி
   கூத்தாநல்லூர்

9. ஆர். சுரேஷ்
   s/o வி. ரகுராமன்
   79, சரோஜினி தெரு
   ராம் நகர், கோவை-9

10. ஆ. ரோகிணி
    c/o பி. ஆராவமுதன்
    கேன் டிபார்ட்மெண்ட்
    **D. S. & A. Co Ltd**
    புகளூர் சர்க்கரைத் தொழிற்சாலை p.o.
    திருச்சி மாவட்டம்

11. எஸ். கோபாலகிருஷ்ணன்
    s/o ஜி. சுந்தரம்
    எதிர். ஜி. நடேசய்யர் ஸ்டோர்
    மேலச்சிந்தாமணி, திருச்சி - 2

12. ரெ. பாமா செல்வி
    9ம் நிலை 'உ' பிரிவு
    அரசினர் மகளிர் உயர்நிலைப் பள்ளி
    கோவில்பட்டி

13. வெ. இராஜேசுவரி
    d/o ஜி. வெங்கடராமன்
    M 37/2 எம். கே. காலனி
    நெய்வேலி-2
    தென் ஆர்க்காடு மாவட்டம்

இந்தக் குழந்தைகளுக்குப் பொற் காசுகள் விரைவில் அனுப்பி வைக்கப்படும்.

சிறந்த முனை என்றால் சிறந்த பிளேடு...

**வைரமுனைகொண்ட சில்வர் ப்ரின்ஸ்**
**உங்களுக்கு சுகமான, வழவழப்பான**
**சவரங்களை அளிக்கிறது!**

பிளேடு கலை நுட்பத்தின் முன்னேற்றத்திற்கு எடுத்துக்காட்டு, சில்வர் ப்ரின்ஸ் ஸ்டெ-யின்லெஸ் முனை. கூர்மையானது...நீடித்து நிற்கிறது கன்னத்தில் கரகரவென்று பிளேடு இழுபடுவதை தவிர்க்கிறது. முகச் சவரத்தை இன்பமயமாக்குகிறது.

சில்வர் ப்ரின்ஸ் ஸ்டெயின்லெஸ் இன்றே உபயோகித்துப் பாருங்கள். அது இல்லாமல் இவ்வளவு நாட்கள் எப்படிச் சமாளித்தோமென வியப்பீர்கள்!











**வைரமுனையுடைய ஒரே பிளேடு**

Grant-2TM



# "ஸைக்கோ ஸாரநாதன்"

## 3. ஹிப்பி இளைஞன்




பாதுகாப்பிலிருந்து தப்பிய ஸைக்கோ ஸாரநாதனின் புகைப்படம் பத்திரிகையில் வெளியாகி யிருந்தது. சிறையில் அவனை அடைக்கு முன்னர் போலீஸார் எடுத்த படம் அது. அவன் தொடக்கத்தில் தமிழ் நாட்டிலிருந்து வடக்கே வந்தவனுதலால் ஒருவேளை இப்போது தமிழகத்துக்கே அவன் திரும்பி யிருக்கக் கூடும் என்று போலீஸார் அநுமானிப்பதாகச் செய்தி கூறி யது. மக்களை எச்சரிக்கையாக இருக்க வேண்டும் எனவும் கேட்டுக்கொண்டது.

அவனுக்கு மனநோய் வைத்தியம் புரிந்த டாக்டர் குஹாவைக் கொன்று விட்டுத் தப்பியிருக்கிறுன். இச் சம்பவம் நிகழ்ந்து மூன்று நாட்கள் ஆகிவிட்டிருந் தன. பம்பாய் சுற்று வட்டாரத்தில் அவனைச் சல்லடை போட்டுத் தேடிப் பார்த்துப் பயன் இல்லாததால் இப் போது போலீஸாரே பத்திரிகைகளுக்குச் செய்தி கொடுத்திருக்கிறுர்கள். படத் தில் காணப்படும் அவனை எங்கேயாவது பார்க்க நேர்ந்தால் உடனே அருகிலுள்ள போலீஸ் நிலையத்துக்குத் தகவல் கொடுக்குமாறும் போலீஸ் அறிக்கை கேட்டுக் கொண்டது.

இச் செய்தியைப் படித்துக் கொண் டிருக்கையில் பத்மநாபன் தமது தோளும் கழுத்தும் சேருமிடத்தில் யாரோ விரல்களைப் பதித்து மெல்ல வருடுவது போல் உணர்ந்தார். அவ் வளவுதான். ''போலீஸ்! போலீஸ்!'' என்று உளறியடித்துக் கொண்டு பத் திரிகை கரங்களில் கசங்கத் திடுக்கிட்டுத் திரும்பினுர்.

''என்ன ஸார்! ஸைக்கோ ஸார நாதனையே நேரில் பார்த்து விட்டது போல் பதறுகிறீர்கள்!'' என்று கேட் டான் அவர் அருகில் நின்று கொண் டிருந்த ஒரு ஹிப்பி இளைஞன்.

அவனைக் கண்ட மறுகணம் பத்ம நாபனின் மனம் அமைதியுற்றது. பர பரப்புடன் ரயில் பெட்டியின் ஜன்னல் அருகே வந்து, ''என்ன?என்ன?'' என்று வினவிய தம் மனைவி மக்களை ''ஒன்று மில்லை'' என்று அடக்கிவிட்டு மீண்டும் ஹிப்பி இருந்த பக்கமாய்த் திரும்பினுர். ''அது என்னன்னு, இந்தச் செய்தி யைப் படிச்சுட்டு ஸைக்கோவைப் பற் றியே நினைச்சுண்டிருந்தேனு, அப்போ தோளிலே எறும்பு ஊர்ந்ததோ என் னவோ, தெரியல்லே...''

''உடனே ஸைக்கோவே உங்க கழுத்தைநெரிக்க வந்துட்டான்னு முடிவு கட்டிட்டீங்களாக்கும்! உங்க தோள் மேலே எட்டிப் பார்த்து ஸைக்கோ ஸார நாதன் பற்றிய செய்தியைப் படித்தே னில்லையா? என் தாடி உரசி யிருக்கும்!''

''இருக்கலாம்; வெலவெலத்துத்தான் போயிட்டேன்... ஸார் எதுவரைக்கும் போறுப்பலே?... இந்தாங்க பேப்பர் பார்க்கிறீங்களா?''

அந்த ஹிப்பி அதை வாங்கி வைத்துக் கொண்டான். ''தலைப்புச் செய்திகளை உங்க பின்னுடி நின்னபடியே பார்த்துட்டேன்; விவரமா ரயில் நகர்ந்தப்புறம், படிச்சுட்டாப் போச்சு. நான் கோடைக் கானல் போறேன்... நீங்க?''

''அடே! என்ன ஆச்சரியம்! நாங்களும் அங்கேதான் போறோம்.''

விடற வீட்டிலே குழந்தைகள் கொலு வைக்கணும்னு ஆசைப்படறா. சரி, இப்போதைக்கு நூற்றி எட்டு டிகிரி வெய்யில்லே யிருந்து தப்பிச்சுப் போமேன்னு கிளம்பிட்டேன்.''

''ஆமாம், கோடை பிறந்தால் கொடைக்கானலுக்கு வருஷா வருஷம் போயிட்டு வர மாதிரிதான் பேச்சுக் கிழியறது உன் அப்பாவுக்கு'' என்று அம்புஜம் மீனுவிடம் முணுமுணுத்தாள்.

''என் ஒய்ஃபும் குழந்தைகளும்தான் உள்ளே இருக்கா. குடும்பம் பெரிசாகி



''......ஸைக்கோவே உங்க கழுத்தை நெரிக்க வந்துட்டான்னு முடிவு கட்டிட்டீங்களாக்கும்...''

''இதிலே என்னப்பா ஆச்சரியம்? வருஷா வருஷம் ஓராயிரம் பேராவது கோடைக்காலத்திலே மலை ஏறி இறங்க மாட்டார்களா?''

மீனு ரயிலுக்குள் இருந்தபடியே தம்மை 'இறக்கி'யதைக் கவனியாதது போல் பத்மநாபன் தொடர்ந்தார்: ''ஸெகண்ட் ஸீஸனுக்குப் போனால் இன்னும் நன்றாயிருக்கும். ஆனால் அப்போ விட்டாலும் ஃபஸ்ட்டிலேயே தாராளமாக இடம் இருக்கிறமாதிரி பிரயாணம் செய்து பழகிவிட்டேன்; — செலவைக் கணக்குப் பண்ணறதுக்கில்லே. மூணுங் கிளாஸ்லே என்னமா அடைஞ்சுண்டு போறது?''

'பரம்பரைப் பணக்காரன் மாதிரிப் பேசினேன் பார்த்தாயா?' என்று கேட்பது போல் பத்மநாபன் தம் மனைவியை

நோக்கி ஒரு முறை கழுத்தைச் சொடுக்கினார். தொடர்ந்து, ''மொத்தம் நாலரை டிக்கட்டு; ஐந்து பர்த் உண்டு. ஒன்றை வேண்டாம்னு வைச்சுட்டு ஐந்து பேர்களும் ஒரே கம்பார்ட்மெண்டிலேயே போறோம் — பையனைத் தரையில் படுக்கப் போட்டுக்கலாம்'' என்றார்.

''ஓகோ! அப்படின்னு நீங்க ஒரு பர்த்தைத் தியாகம் பண்ணிட்டதாலே பக்கத்தில் இருக்கிற 'கூப்பே'யில் நான் மட்டும் தனியா யிருப்பேன்.

''தனியா ஏன் இருக்கணும்? தூக்கம் வரவரைக்கும் எல்லோரும் சேர்ந்து பேசிண்டே போனால் போச்சு.''

இப்படிக் கூறும்போதே பத்மநாபனுக்கு ஏன் சொன்னோம் என்றிருந்தது. ஹிப்பி என்றாலே அவருக்கு அலர்ஜி. அவர் அவனை ஒதுக்கவே விரும்பினார். ஆனால் ஒரு பத்திரிகையாளர் என்ற முறையில் — மனசுக்குள் என்ன எண்ணினாலும் வெளிப்படையாக-அவர் எல்லாரிடமும் அன்பாகவும் சுமுகமாகவும் பேசிப் பழகிவிட்டார். அந்தப் பழக்கம் இங்கே காலை வாரிவிட்டுவிட்டது.

''என்னா! மணி அடிச்சுட்டாப் போலே இருக்கே, ஏறிக்கோங்களேன்'' என்று அம்புஜம் உள்ளேயிருந்தபடி குரல் கொடுத்தாள்.

பத்மநாபன் அவள் விருப்பப்படி நடந்து கொண்டபோது அந்த ஹிப்பியும் இன்னொரு முறை அழைக்கக் காத்திராமல் அதே அறையில் வந்து அமர்ந்துவிட்டான்.

''உங்க பேரு? தெரிஞ்சுக்கவேயில்லையே?'' என வினவினார் பத்மநாபன்.

''என் பேரா? என் பெயரையா கேட்கறீங்க ஏன்? எதற்கு?'' என்றான் அந்த ஹிப்பி.

திடுமென்று விநோதமான முறையில் அவன் தனக்குள்ளேயே சுருண்டு கொள்வது பத்மநாபனுக்கு ஆச்சர்யமளித்தது.

''ஒரு பேச்சுக்குக் கேட்டேன். விருப்பமில்லையானால் நீங்கள் சொல்லவேண்டாமே?'' என்றார்.



''...லைக்கோ ஸாரநாதனைக் கோர்ட்டிலே விசாரிச்சப்போ நான் பம்பாயிலேதான் இருந்தேன்...''

''ஊரைச் சொன்னாலும் பேரைச் சொல்லக் கூடாது, ஸார்!'' என்றான் அவன், சிரிப்பு வராமல் சிரித்து.

''இதென்ன வேடிக்கை? உங்க பேரை நாங்க தெரிஞ்சுகண்டால் என்ன தப்பு? உங்களுக்கு என்ன நஷ்டம் அதிலே?''

''சும்மா தமாஷ் பண்ணினேன், ஸார்! என் பெயரை நான் சொல்லாட்டா நீங்க தெரிஞ்சுக்க முடியாதா என்ன? அதுதான் வெளியிலே டைப் அடிச்சு ஒட்டியிருக்கானே !''

'இவன் குரல் இலேசாக நடுங்குகிறதோ?' என்று எண்ணினார் பத்மநாபன்.

''எனக்குத் தெரியும், இவர் பேரு'' என்றாள் அனு. ''இவர்தான் ஹிப்பி மாமா !''

''ஹிப்பி மாமா! ஹிப்பி மாமா!'' என்று கைகொட்டினான் விசு.

''கரெக்ட்! ஹிப்பி மாமான்னே நீங்கள்ளாம் கூப்பிடுங்க, ஓ. கே.?''

ரயில் நகர்ந்தது.

'' உண்மையைச் சொல்லணும்னா எனக்கு ஹிப்பிகளை அவ்வளவாகப் பிடிக்காது, ஸார் !'' என்றார் பத்மநாபன். ''நான் உங்களைப் பற்றிச் சொல்றதா நினைக்காதீங்க; பொதுவாப் பேசறேன்.''

''என்ன? அவங்களிடம் உங்களுக்கு ஏன் வெறுப்பு?''

''கழுத்து வரை முடி; கழுவப் படாத தாடி மீசை ; ஆரஞ்சு நிற ஜிப்பாவில் பச்சை நிறப் பூக்களும், ஊதா நிற இலைகளும் டிசைன்; நீல நிற பாண்ட்; ஆந்தைக் கண் மூக்குக் கண்ணாடி; கழுத்திலே கண்ணாடி மணிமாலை- என்ன வேண்டிக் கிடக்கு?''

'' என்னை அப்படியே கச்சிதமா வர்ணிச்சுட்டீங்க — எழுத்தாளர் இல்லையா? அதை அப்பவே தெரிஞ்சுக்கிட்டேன். ஆனால் ஒரு திருத்தம் — இது ஜிப்பா இல்லே, குரு ஷர்ட்; இது பாண்ட் இல்லே, பெல் பாட்ஸ்.''

'' பெல் பாட்ஸோ ஹெல்—பாட்ஸ்ஸோ — எனக்குப் பிடிக்கவில்லை, சுவாமி!''

''ஹிப்பிகளின் உடை விஷயம் உங்களுக்கு ஒப்புதலாயில்லை என்ற ஒரு காரணத்துக்காக மட்டும் நீங்கள் அவர்களை வெறுக்கலாமா ? ஹிப்பி இயக்கம் எதனால் தோன்றியது என்பது உங்களுக்குத் தெரியுமா ?''

''மிஸ்டர்! என்னை எழுத்தாளன் என்றீர்கள் முதல்லே நான் ஜர்னலிஸ்ட் ; அப்புறம்தான் எழுத்தாளன்.''

'' சரி, சொல்லுங்க.''

'' வியட்நாம் போரை அமெரிக்க இளைஞர் சமுதாயம் வெறுத்ததால் உருவானது ஹிப்பி இயக்கம். மனிதன் மனிதனைக் கொல்வதைத் தவிர்த்துப் பரஸ்பரம் அன்பு செலுத்த வேண்டும் என்பது அதன் நோக்கம். மலர்கள் அதன் சின்னம்.

''ஆனால் அமெரிக்க ஹிப்பி இயக்கம் இந்தியாவுக்கு — சிறிய அளவில்தான் என்றாலும் — பரவுவானேன்? அதுதான் எனக்குப் புரியவில்லை.''

'' ஏன் நீங்கள் விவரித்த கொள்கைகள் நல்லவையல்லவா? அவை ஏன் இங்கு பரவக் கூடாது?''

''செல்வம் கொழிக்கும் அமெரிக்காவில் எல்லாவித வாழ்க்கை வசதிகளும் பெருகி விடவே அவர்களை ஈர்க்கும் லட்சியப் பிடிப்புக்கள் இன்றி இளைஞர்கள் அலைந்தார்கள். ஹிப்பிகளானார்கள். போரை வெறுத்தது சரி, செல்வத்தைத் துறந்தது சரி. ஆனால் சோம்பித் திரிவதோடு நில்லாமல் கொடிய பழக்கவழக்கங்களுக்கும் அவர்கள் அடிமைகளாகிறார்களே ! எண்ணவே கூசுகிற செட்ட நடத்தைகளைப் பயில்கிறார்களே! அந்த இயக்கம் இங்கே நமது இளைஞர்களைப் பிடிப்பானேன் ? அந்த இயக்கத்தில் உள்ள நல்ல அம்சங்களை இவர்கள் பின்பற்றுகிறார்களோ, இல்லையோ, கொடிய பழக்கங்கள் கலபமாகத் தொற்றிக் கொள்ளும். இந்தியா என்ன, அமெரிக்கா போல் செல்வத்தில் உயர்ந்து விட்டதா; அல்லதுஇங்கே இளைஞர்களுக்கு லட்சியக் குறிக்கோள்களுக்குத்தான் பஞ்சமா?''

'' அப்பா ஒண்ணும் மீட்டிங்கிலே பேசலை., கையைத் தட்டி விடாதே!'' என்று திறந்த வாய் மூடாமல் கேட்டுக் கொண்டிருந்த அனுவைப் பார்த்துச் சொன்னாள் அம்புஜம்.

அதைப் பொருட்படுத்தாமல் பத்மநாபன் முடிவுரை நிகழ்த்தினார்: ''அதனால்தான் ஸார், எனக்கு ஹிப்பிக் கோலத்தில் இந்தியனைக் கண்டால் கோபம் கோபமாய் வருகிறது. அமெரிக்க ஹிப்பிகளிடம் உள்ள கொஞ்ச நஞ்சம் அனுதாபமும் எனக்கு இவர்களிடம் கிடையாது !''

''உண்மையில் எனக்குக்கூட இந்த ஹிப்பிகளிடத்தில் மோகமோ அனுதாபமோ ஒண்ணும் கிடையாது ஸார். ஏதோ இதுதான் இந்தக் காலத்தில் லேட்டஸ்ட் ஃபாஷன் அப்படீன்னு சொல்லிக்கிடறாங்க. நானும் டிரஸ் பண்ணிக்கிறேன், அவ்வளவுதான்.''

''ஐ ஆம் கிளாட். நீங்க இப்படிச் சொன்னதுக்காக உங்க வாய்க்குச் சர்க்கரை போடணும். ஆனா இப்போ எங்க கிட்டே இருக்கறது மனோகரம்தான். அம்புஜம் டின்னைத் திறந்து ஸாருக்குக்

கொஞ்சம் பட்சணம் ஸாங்க்ஷன் பண்ணு !''

'' நான் திறக்கறேன் ; நான் திறக்கறேன் '' என்று அனுவும் விசுவும் போட்டி போட்டுக் கொண்டிருந்த போது, '' நீங்க சாப்பிட்டாச்சா ? இங்கேயே சாப்பிடலாம். இன்னும் நாலு பேர் வந்தாலும் காணுகிறமாதிரி தான் அம்புஜம் சமையல் பண்ணிக் கொண்டு வந்திருப்பாள். பத்துநாளைக் கான பட்சணங்கள் வேறு. யோசிக்கா தீங்க'' என்று சொல்லிப் பத்மநாபன் அந்த ஹிப்பியை வற்புறுத்தினர். ஹிப்பிகள் விஷயத்தில் அவன் தம் முடன் ஒத்த கருத்துடையவனுயிருந்த தில் அவருக்கு அவ்வளவு உற்சாகம்!

சாப்பிடும் போது, '' அப்பா ! ஸைக்கோ ஸாரநாதன்னு என்னமோ பேசிண்டிருந்தேளே, என்ன விஷயம்?'' என்று கேட்டாள் மீனு.

'' இப்போ எதுக்கு அதெல்லாம், ராத்திரி வேளையிலே ?'' என்ருள் அம்புஜம்.

''நெருப்புன்னு வாய் வெந்துடுமா, மாமி?'' என்ருன் ஹிப்பி. ''இந்த ஸைக்கோ ஸாரநாதனை கோர்ட்டிலே விசாரிச்சப்போ நான் பம்பாயிலே தான் இருந்தேன். ஒரு நாள் வேடிக்கையாகோர்ட்டுக்குப் போனேன். உசந்தா ஒரு இருபதடி தூரம் இருக்கும் அவனுக்கும் எனக்கும் இடையிலே. இவனு நாற்பத்திரண்டு கொலைகளைப் புரிந்தவன்னு கண்களைக் கசக்கிண்டு ஒரு தடவைக்கு நாலு தடவையாய்ப் பார்த்தேன். நம்பவே முடியலே. இப்போ என்னைப் பார்த்தால் கொலை காரன்னு உங்களுக்குத் தோணுமா ? அப்படித்தான் அவனும் பார்க்கச் சர்வ சாதாரணமாக இந்தப் பூனையும் பாலைக் குடிக்குமாங்கிற மாதிரி இருந்தான்.''

''அப்படிப்பட்டவன் எதுக்காக நாற் பத்திரண்டு கொலைகள் பண்ணனும் ?'' என்று மீனு கேட்டாள்.

'' அதுதான் ஆச்சர்யம் ! அவனுக் குத் திடீரென்று அடக்க முடியாத ஒரு வெறி வந்து விடுகிறதாம். அப்போ கையிலே ஒரு மணிக் கயிற்றைச் சுற்றி எடுத்துக்கொண்டு கிளம்பிவிடுகிருனும். தனியாக யாராவது அகப்பட்டுக் கொள் ளும்போது அவங்க கழுத்திலே கயிற் றைச் சட்டென்று சுற்றி, இறுக்கி...''

''போதும், போதும்! கேட்கவே சகிக்கலே ; நீங்க அதை ஆக்ஷனேடு வேறே சொல்லிக் காட்டறேளே!..... குழந்தைகள் ராத்திரி சொப்பனம் கண்டு உளறி அடிச்சுண்டு எழுந்திருக்கப் போறதுகள் '' என்ருள் அம்புஜம், அந்த ஹிப்பியைப் பார்த்து.



''பெரியவங்களைப் பார்க்கப் போகும்போது வெறுங் கையோடு போகக் கூடாது என் பார்கள் ! அதனுல் உங்களுடைய அடுத்த ஆண்டு பிறந்த நாள் விழா போஸ்டர்கள் ஐ ய ா யி ர ம் கொண்டுவந்திருக்கேன். கையில் மாதிரிக்கு ஒன்று......''

'' இருந்தாலும் அந்த எமகாதகப் பயல் போலீஸ் பாதுகாப்பிலிருந்து தப்பிச்சுண்டுட்டான், ' பார்த்தீர்களா, அப்பா? அது எப்படிச் சாத்தியமாயிற்று? டாக்டர் குஹாவிடம் மன நோய் மருத்துவத்துக்கென்று இவன் போயிருந் தாலும் போலீஸ் பாதுகாப்பின்றியா சென்றிருக்க முடியும்? பிறகு அவரைக் கொன்றுவிட்டு இவன் கம்பி நீட்டுவது எப்படிச் சாத்தியமாயிற்று?'' — மீனு ஒரு கையால் சாப்பிட்டவாறே இன் ஞெரு கையால் அந்த ஹிப்பியிடமிருந்து தினசரியை வாங்கிக் கட்டம் போட் டிருந்த செய்தியை இதற்குள் படித்து விட்டிருந்தாள். பத்திரிகையைத் திருப் பிக் கொடுத்தவாறே மேற்படி கேள்வி யைக் கேட்டாள்.

'' அதை யெல்லாம் போலீஸிலே பேப்பர்காரன்கிட்டே சொல்வாளா ? மானம் போயிடாதா ? இதைக்கூட் மூணு நாட்கள் கழிச்சு வேறே வழியில் லாமல்தான் சொல்லி இருக்கா. மேற் கொண்டு ஏதாவது ஒரு கொலை நடந்து விட்டால், ' ஸைக்கோ தப்பித்துக் கொண்ட விவரத்தை ஏன் வெளியிடலே? ஜனங்களுக்கு எச்சரிக்கை செய்திருந் தால் அவர்கள் முன்ஜாக்கிரதையாக இருந்திருப்பார்களே ; கொலையைத் தவிர்த்திருக்கலாமே' என்று எவனாவது கேட்டுடுவான். அதுக்குப் பயந்துதான் மூணு நாளைக்கு மேல் விஷயத்தை மறைக்காமல் நிருபர்களைக் கூப்பிட்டு அனுப்பி விட்டார்கள்.''

''இதே மூணு நாளைக்குள்ளே அந்த ஸைக்கோவைக் கண்டுபிடிச்சு அரஸ்ட் பண்ணி யிருந்தாளானு திமிலோகப் படும். அவன் எவ்வளவு சாமர்த்தியமா தப்பிச்சுக்கப் பார்த்தான், இவா

அதுக்கு இடம் கொடுக்காமே எப்படி வல்லவனுக்கு வல்லவனு நடந்துண்டா என்றெல்லாம் விவரமாகச் சொல்லி யிருப்பா'' என்றாள் அம்புஜம்.

''அவா எவ்வளவுதான் இந்த மானக் கேட்டை மூடி மறைக்க முயன்றாலும் முடியாது. அம்புஜம்! பத்திரிகைச் சுதந்திரம் இன்னும் அடியோடு பட்டுப் போயிடலே. நிருபர்கள் சும்மாவிட மாட்டார்கள். போலீஸ் செய்தி வந்த சூட்டோடு பிரசுரமாகி யிருக்கு. மேற் கொண்டு தகவல்கள் சேகரிக்க நேரம் இருந்திருக்காது. ஆனால் நாளைப் பத் திரிகையில் நிருபர்கள் தூண்டித் துருவிக் கண்டுபிடித்த விவரங்கள் வெளியாகும் பார்!''

ஹிப்பி ஒரு கொட்டாவி விட்டான். ''காலம்பற பார்க்கலாம் ஸார்!'' என்று சொல்லிவிட்டுப் பத்திரிகை யைக் கையில் எடுத்துக் கொண்டு எழுந் தான். ''போய்க் கையைக் கழுவிண்டு அப்படியே படுத்துக்கறேன்'' என்று கூறி நடந்தான்.

இலைகளையெல்லாம் வாரி வெளியே எறிந்தாள் அம்புஜம். ஜன்னல் வழியே கையைக் கழுவிக் கொண்டு படுக்கை களை விரிக்கத் தொடங்கினார் பத்ம நாபன். ''ஏதோ ஹிப்பி மாதிரி உடுத்திண்டாலும் தான் ஒரு ஹிப்பி இல்லேங்கிறானே, அந்த மட்டும் சந்தோ ஷம்'' என்றார்.

மீனா கோபமாகக் கூறினாள்: ''நீங்க நினைக்கிறது தப்பு. நிலைமையைத் தலை கீழா மாத்தறேள். ஹிப்பிகளைப் பிடிக் காது. அவர்கள் கொள்கைகளில் அக் கறை இல்லை என்பவன் உடை மட்டும் ஹிப்பி பாணியில் அணிவானேன்? எதுக்கு இப்படி வேஷம் போடணும்? இந்த ஆசாமியே போலி, அயோக்கி யன்னு எனக்குத் தோணறது.''

''இந்தா மீனா! நம்ப குடும்பத்தில் கதை எழுத உன் அப்பா ஒருத்தரே இப்போதைக்குப் போதும். நீ வேறே கற்பனைக் குதிரையைத் தட்டிவிடாதே'' என்று அவள் வாயை அடைத்தாள் அம்புஜம். பின்னர், ''எனக்கென் னவோ அவனைப் பார்த்தால் நல்ல பிள்ளையா லட்சணமாத்தான் தோணித்து; உங்க அக்கா பெண் ணுக்கு வரன் வரன்னு அடிச்சுக்க றாளேன்னு ஞாபகம் வந்தது'' என்றாள்.

''நல்ல வேளை, அவனை ஜாதகம் கேட் காமல் விட்டியே!'' பத்மநாபன் சிரித்தபடியே தலையணையைத் தட்டிப் போட்டார்.

''ஜாதகம் கேட்கலேன்னாலும் விலாசத்தையாவது விசாரிச்சு வைச் சுக்கலாம் இல்லையா?''

''என்னம்மா இது? அவன் என்ன ஜாதியோ, குலமோ? என்னென்னவோ சொல்லிண்டே போறியே! அப்பா வேணும்னு இந்தக் காலத்தில் ஜாதி வித்தியாசம் பார்க்கக் கூடாதுன்னு நினைக்கலாம். ஆனால் அத்தை அப்படி இல்லையே!''

''எல்லாம் நம்மடவா மாதிரிதான், மாமா மாமின்னு வாய் நிறையக் கூப் பிட்டு வக்கணையா அழகாப் பேசறான்.''

''பேச்சை வைத்து இந்தக் காலத் திலே எதையும் சொல்ல முடியாது, அம்மா. நம்ம தெருவிலேயே இருக்கிற ஆளும் கட்சிக்காரரா என்னைப் பார்த்து, 'குழந்தே! ஆத்திலே அப்பா இருக்கா ளா'ன்னுதான் கேக்கறா. அவா நம்ம வீட்டுக்குள்ளே வந்துட்டா அப்பா எப் படிப் பேசறாங்கறே? 'வாங்க, இருந் துக்கிடுங்க. என்ன சாப்பிடறீங்க? கொஞ் சம் காப்பி கொண்டாறச் சொல்லட் டுங்களா'ன்னு கேட்கிறாளா இல்லையா?''

மீனா நடித்துக் காட்டியதைப் பார்த் துப் பத்மநாபன் உள்பட அனைவருமே சிரித்தார்கள். அது ஓய்ந்ததும் பத்ம நாபன் கூறினார்: ''அவனிடம் போய் என்னன்னு விசாரிக்கிறது? கடைசி வரைக்கும் அவன் தன் பெயரைக்கூடச் சொல்லலையே! செங்கல்பட்டில் இறங்கி வெளியே ஒட்டியிருக்கிற 'லிஸ்ட்'டைத் தான் பார்க்கணும்.''

பத்மநாபன் இவ்வாறு சொன்னாரே ஒழிய, செங்கல்பட்டில் ரயில் வண்டி நின்றபோது, அவர் குறட்டை விட்டுத் தூங்கிக் கொண்டிருந்தார். அந்தப் பெட்டியில் விழித்துக் கொண்டிருந்த வள் மீனா ஒருத்திதான். ஆனால் அவ ளுக்குத் தனியே கீழே இறங்கத் தயக்க மாகவும் ஓரளவு பயமாகவும்கூட இருந்தது.

பத்மநாபன் செய்யத் தவறிய காரி யத்தை அந்த ஹிப்பி ஞாபகமாகச் செய் தான். 'ரிஸர்வேஷன் கிளார்க் கேட்ட போது எனக்கு நானே சூட்டிக் கொண்ட புதுப் பெயரை அதற்குள் மறந்து போனேனே! என்ன அசட்டுத் தனம்! நான் ஏதாவது ஒரு பெயரைச் சொல்லி வைக்கப் பின்னால் அந்தப் பத்தி ரிகைக்காரன் இதில் ஒட்டப்பட்டுள்ள வேறு பெயரைப் பார்த்துத் தொலைத் தானானால் சந்தேகம் ஏற்பட்டு விபரீத மாக முடியுமே! நல்ல வேளை தப்பித் தோம். இப்போதாவது நன்றாக மனனம் செய்து கொள்வோம், புதுப் பெயரை' என்று எண்ணியவனாய், ''அமிர்த லிங்கம், அமிர்தலிங்கம்'' என்று திரும் பத் திரும்ப மிருதுவான குரலில் சொல் லிக் கொண்டே பிளாட்பாரத்தில் அலைந்தான் ஹிப்பி. (தொடரும்)

வாய் நாற்றம் உங்களை
விலகி நிற்கச்செய்கிறது




பூரண பல்
பாதுகாப்பிற்கு
**கால்கேட் டூத் பிரஷ்**
உபயோகியுங்கள்.
ஒவ்வொருவரின் தேவைக்கேற்றவாறு
அமைப்பு—15 ரகங்கள்.

## கால்கேட் டென்டல் க்ரீமின் மூலம் வாய் துர்நாற்றத்தைத் தடுத்திடுங்கள்... நாள்முழுவதும் பற்சிதைவை எதிர்த்திடுங்கள்!

கால்கேட், 10க்கு 7 பேர்களில் வாய்துர்நாற்றத்தை உடனடியாக அகற்றுகிறது என்றும், உணவு உட்கொண்டவுடன் கால்கேட் முறையில் பற்களைத் துலக்குவதால், இதுவரை பற்பசை வரலாற்றிலேயே கண்டிராத பேரளவில் ஏராளமானவர்களுக்கு பற்சிதைவு தடுக்கப் படுகிறது என்றும் விஞ்ஞான சோதனைகள் நிரூபித்துள்ளன. ஏனெனில், ஒரே தேய்ப்பில் வாய்துர்நாற்றத்தையும், பற்சிதைவையும் விளைவிக்கும் கிருமிகளை 85 சதவீதம் வரை, கால்கேட் டென்டல் க்ரீம் அகற்றி விடுகிறது.
அதன் விந்தைமிக்க பெப்பர்மின்ட் சுவையினாலே— கால்கேட் டென்டல் க்ரீம் கொண்டு குழந்தைகள் தவறாமல் பல்துலக்க விரும்புவதில் வியப்பென்ன!

தூய்மையான இனிய மூச்சுடனே,
வெண்மையான பற்களையும் பெற்றிடவே...

**உலகிலேயே அதிக மக்கள்
மற்றெந்த பற்பசையையும்விட,
கால்கேட் பற்பசையையே
வாங்குகிறார்கள்!**



# மூன்று மந்திரவாதிகள்

கதை: வாண்டுமாமா
சித்திரம்: ராஜு









அந்தக் குட்டையில் ஓர் அழகிய மீன் துள்ளி விளையாடியது. அதுதான் புவனா. ஓர் ஆமையும் அதில் நீந்திக் கொண்டிருந்தது. அதுதான் இளவரசன் பார்த்திபன்.



நடுக் கானகத்தில் குட்டையைக் கண்ட சசாங்கனுக்கு உண்மை தெரிந்துவிட்டது.









பொன் மீனே புவனா! இனி உன்னால் ஏதும் செய்ய முடியாது. உன்னை என் மந்திரத்தால் கட்டி விட்டேன். உன் காதலனைப் பார், என் காலடியில். உன் உதவி யாலல்லவா என்னை அவன் வெற்றி கொண்டான்?

அமைதியாக வாழ்வதற்கும் கூடத் தகுதி யற்றவன் நீ. என் பெண்ணின் மனத்தைக் கவர்ந்து அவளை எனக்கு விரோதியாக் கினாய் அல்லவா? உன்னைக் கல்லாக்கி விடுகிறேன்... அதுதான் சரி.

சசாங்கன் பார்த்திபனைக் கல்லாக் கிய அதே வேளையில், சகோத ரர்கள் முன்பு பிரிந்த காட்டுக் கோயிலுக்கு ஆனந்தன் வருகிறான்.

சகோதரர்களைச் சந்திக்க வேண்டிய நாள் இன்று தானே...

மூவரும் சந்திக்க வேண்டிய குறிப்பிட்ட நாளன்று முதலாவதாக வந்த ஆனந்தன் அம்பு பதித்த வேங்கை மரத்தை அணுகிப் பார்க்கிறான்.

பார்த்தியா, ஐயோ! தம்பி உனக்கு என்ன ஆபத்தோ தெரியவில்லையே. உன் அம்பிலிருந்து ரத்தம் சொட்டுகிறதே....

ஆனந்தன் தன் கழுகு நண்பனை நினைக்க அது உடனே தோன்றுகிறது.

நண்பனே! என் தம்பிக்கு ஆபத்து. அவன் சென்ற இந்தப் பாதையில் நீ எனக்கு வழிகாட்டி அழைத்துப் போ.

கலங்காதே நண்பா. நான் பறந்து போகிறேன். நீ குதிரையில் தொடர்ந்து வா.

அந்த வேளையில் சசாங்கனிடம்...

என்ன துள்ளுகிறாய்? எப்படித் தப்பலாம் என்று பார்க்கிறாயா? இனி அது முடியாது. ஆ, இது என்ன? என் மந்திர வட்டத் துக்குள் ஏதோ சலனம். என்னைத் தேடி யாரோ வருகிறார்கள்.

ஓ! கல்லான இவனுடைய சகோதரன் வருகிறானே? வரட்டும் இவனுக்குத் துணை யாக அவனையும் கல்லாக் குகிறேன்.. இந்த உருவத்தில் அவனை வரவேற்கக்கூடாது... ம்...

சசாங்கன் தன்னை ஒரு குடு குடு கிழவனாக உருமாற்றிக் கொண்டு, தன்னைச் சுற்றி ஒரு மந்திர வட்டத்தையும் அமைத்துக் கொண்டிருக்கிறான்.

பெரியவரே! இந்தப் பக்கமாக யாராவது ஒரு வாலிபன் குதிரை மீது...

தம்பி! உனக்குத் வேண்டிய தகவல்களைச் சொல்லுகிறேன். முதலில் நான் குளிர் காயச் சுள்ளிகளைப் பொறுக்கி வந்து இந்தத் தீயில் போடப்பா...

கிழவன் விருப்பப்படி ஆனந்தனும் கழுகும் சுள்ளிகளுடன் மந்திர வட்டத்துக்குள் வந்தனர். அடுத்த விநாடியே இருவரும் கல்லாயினர்.

பத்மபுரி மன்னனின் இரண்டாவது இளவரசனே, தம்பியை மீட்கவா வந்தாய்? ஹ... ஹ... ஹா! கல்லுருவாகிக் காலமெல்லாம் இந்தக் கானகத்தின் அழகை ரசித்துக் கொண்டிருங்கள் இருவரும்...

பரிமள நாதரின் மூத்த மகனும் வருவான், தம்பிகளை மீட்பதற்கு. வரட்டும் அவனையும் கல்லாக்கி இங்கேயே காத்திருப்பேன். ஹ... ஹ... ஹா!...

தொடரும்

இடுக்கண்
களைந்திடும் நட்பு போல்

# வலியைப் போக்கிடும் 'ஆஸ்ப்ரோ'



'ஆஸ்ப்ரோ' மட்டுமே மைக்ரோஃபைன் செய்யப்படுகிறது
அதிவேகமாக வலியை வெளியே இழுப்பதற்காக

நிகோலஸ் (N) தயாரிப்பு

A.G.45.TM

# 'ஜெய் பங்களா!'



கெ. ஸ்ரீநிவாசன்

பாகிஸ்தான் விமானங்கள் தாக்க முற்பட்டபோது நமது பீரங்கிகள் அவற்றை 'வரவேற்றன' !



பங்களா தேஷ் விடுதலை பெற்றபின் சௌடி கங்கையில் கப்பல்களும் விசைப் படகுகளும் சகஜமாகச் செயல்படத் தொடங்கி விட்டன.

## 6. வெற்றியின் ரகசியமும் சரணாகதிப் படலமும்

**டா**க்கா நகரத்தின் குதிரைப் பந்தய மைதானத்தில் எள் போட்டால் எள் விழாது. அவ்வளவு கூட்டம். டாக்காவை முற்றுகையிட்டு இறுதியில் பாகிஸ்தான் படைகளைப் பணிய வைத்த இந்தியராணுவத்தின் கிழக்குப் பகுதி தளபதி லெப்டினன்ட் ஜெனரல் அரோரா, சரணாகதியை ஒப்புக்கொள்ள டாக்கா வந்த தினம். எங்கு பார்த்தாலும் பச்சைக் கொடிகள், வங்கதேசப் படம் உள்ளிட்டவை. ஆண், பெண், குழந்தைகள் நல்ல ஆடைகள் உடுத்தித் தங்கள் நாட்டு விடுதலையைக் கொண்டாடக் குழுமியிருந்தனர். அதைவிட முக்கியம் மாதர்களின் கற்புக்கும் கண்யத்துக்கும் இனிக் களங்கம் ஏற்படாது என்ற நிலைமை வந்த தினம் அல்லவா? பழைய கதையை இலேசாக ஞாபகப்படுத்தினால்கூட வங்க தேச மாதர்கள் மூர்ச்சை போட்டு விழும்படி அட்டூழியம் புரிந்திருந்தது பாகிஸ்தானின் ராணுவம்.

இந்தியப் படைகள் ஜெஸ்ஸோர் ராணுவ கேந்திரத்தைப் பிடித்ததுமே ராணுவத்தின் முன்னேறுப் பிரிவுகளின் தலைவர்கள் மக்களின் ஆர்வம் கட்டுக்கடங்கவில்லை என்றும், இந்திய ஜவான்களைத் தோளில் தூக்கிக் கொண்டாடுவதாயும் செய்தி அனுப்பியிருந்தனர். ஆனால் டாக்காவில் ஜெனரல் அரோராவுக்குக் கிடைத்த வரவேற்பை வங்கபந்து ஷேக் முஜிபுர் ரஹ்மானுக்குக் கிடைத்த வரவேற்புடன்தான் ஒப்பிட முடியும். இரண்டும் சரித்திரத்தில் பிரசித்தி பெற்றவை.

கடுகு சிறுத்தாலும் காரம் போகாது என்பார்கள். பாகிஸ்தான் ராணுவத்தின் அளவும் கியாதியும் கடுகை விடச் சிறுத்தும் அதன் ராணுவத் தலைவர்களின் திமிர் அடங்கவில்லை. இந்திய ராணுவத் தலைவர் அரோரா, கப்பற்படை அட்மிரல் கிருஷ்ணன், விமானப் படைத் தளபதி திவான் ஆகியோர் மைதானத்தில் வெகு கஷ்டப்பட்டு வந்து சேர்ந்தனர்.



மக்கள் அவர்களை அவ்வளவு கௌரவப்படுத்தி விட்டார்கள். சரணாகதி சமயம் வந்தது. நிருபர்களும் புகைப்படக்காரர்களும் தயாராக இருந்தனர். ஆனால் கூட்டம் காரணமாகப் புகைப்படம் எடுப்பதே அசாத்தியம் ஆகிவிடும் என்று தோன்றியது. கொஞ்சம் முன்னதாகவே படம் எடுக்க முற்பட்டவர்களைப் பார்த்து லெப்டினன்ட் ஜெனரல் நியாஸி தம் பக்கம் இருந்த மேஜர் ஜெனரல் ஜெம்ஷெட்டைச் சுட்டிக் காட்டினார். தம் படம் வராமல் ஜெம்ஷெட் படம் உலகம் முழுதும் சுற்றட்டுமே என்ற கெட்டஎண்ணம்! புகைப்படக்காரர்களும் ஜெம்ஷெட் படத்தை எடுக்கையில் ஓர் இந்திய ராணுவ அதிகாரி முன்னால் நின்றவர்தான் கிழக்குப் பாகிஸ்தான் ராணுவத்தின் தளபதி என்று சமிக்ஞை செய்தார். நூற்றுக்கணக்கான புகைப் படங்களை எடுக்கவே நியாஸிக்குக் கோபம் பொங்கி வழிந்தது. அசம்பாவிதமாகப் பேச ஆரம்பித்தார். சட்டென்று ஓர் இந்திய பிரிகேடியர் இடைமறித்து, ''நீர் யுத்தக் கைதி, தளபதி அல்ல என்பதை மறந்துவிடாதீர். என்ன நடந்தாலும் வார்த்தை தடிக்காமல் இருக்கட்டும்'' என்று எச்சரித்தார்.

சரணாகதி என்பது மிகவும் சோகமான கட்டம். தம் நாட்டில் உயர்ந்த பதவியை வகித்தவர் தம் அந்தஸ்துக்குரிய சின்னங்களைக் களைந்து, பெல்ட்டைக் கழற்றித் தம் ஆயுதத்தைத் துறந்து மண்டியிடுவது என்பது அந்த நபர் ஒரு முறை இறப்பதற்கே சமம். இந்தச் சம்பவம் ஏற்படுவதற்குக் காரணமாக இருந்த ஜெனரல் யாஹ்யாவின் தலைகுனிவே தவிர அது நியாஸியின் முழுத் தோல்வி அல்ல. ஆனால் ஒன்பது மாதங்கள் நிராயுதபாணிகளைக் கொன்று அவர்களுடைய பெண்மணிகளுக்குக் கொடுமை செய்து வங்க தேசத்தை ருத்ரபூமியாக்கிய பொறுப்பு அங்கு கவர்னராக இருந்த டீபர்மன் அலியையும் நியாஸியையும் சுட்டாயம் சாரும்.

எப்படி ஷேக் ரஹ்மான் — யாஹ்யா பேச்சு முறிவைப் பற்றி எழுதியவர் யுத்த முடிவுக்கு வந்துவிட்டார் என்று வியக்க வேண்டாம். திரும்பத் திரும்பப் பாகிஸ்தானின் குட்டை குழப்பலையே சொல்ல வேண்டாம் என்று சில படிகள் உயரத் தாவினேன். ஜெனரல் யாஹ்யா கான் ஷேக் ரஹ்மான் தேசத் துரோகி என்று சொன்ன பிறகு சுமுகத் தீர்வுக்கு வழியில்லை என்பது தெளிவாகிவிட்டது. சில சமயங்களில் துரியோதனனின் புத்தி நிலை ஞாபகத்துக்கு வருகிறது. பாதி ராஜ்யமே கேட்ட பாண்டவர்கள் ஐந்து கிராமங்களையாவது கொடுங்கள் என்று நயந்து கேட்கவில்லையா? ஷேக் ரஹ்மான் காண்பித்த நிதானம் தருமபுத்திரர் விரும்பிய சமாதான ஆர்வத்துடன் ஒப்பிடத் தக்கது.

ஷேக் ரஹ்மானுக்கு அவர் கைதானபோது சமாதானம் என்ற கட்டம் தாண்டிவிட்டது என்பது தெரியும். அவாமி லீக் இளைஞர்கள் பல்லாயிரக் கணக்கில் ஆவேசத் தீயில் குதிப்பார்கள் என்றும் தெரியும். ஆனால் அவ்வளவு பேர்களும் விட்டில்பூச்சி மாள்வதைப் போல மாளவும் போகிறார்கள் என்பது தெரியாது.

முதலில் டாக்காவில் தொடங்கிய அவாமி லீக் — பாக். ராணுவ மோதல் வங்க தேசம் முழுதும் பரவிற்று. டாக்காவிலேயே டாங்கிகள் சகிதம் ராணுவத்தார் பேட்டை பேட்டையாகக் கொளுத்தலாயினர். டாக்கா சர்வ கலாசாலையில் பல நூறு பேராசிரியர்களும் அறிவாளிகளும் விண்ணுலகுக்கு அனுப்பப்பட்டனர். அவாமி லீக் இளைஞர்களை ஒடுக்குவதாகச் சொல்லிக் கொண்டு தெருத் தெருவாகப் பாகிஸ்தான் ராணுவம் அட்டகாசத்தில் ஈடுபட்டது.

மைமன்ஸிங்கிலிருந்து ஜெஸ்ஸோர், கொமில்லா, நாராயணகஞ்ச், சிட்டகாங் வரை ராணுவத்தார் பயங்கர முறைகளில் இறங்கினர். தகப்பனார் முன்னிலையில் பெண்ணைக் கற்பழிப்பது, பிள்ளை முன் தாயாரைக் கற்பழிப்பது போன்ற மாபாதகச் செயல்களில் ஈடுபட்ட பாகிஸ்தான் ராணுவம் பிறகு கிரா

வங்க தேசத்துக்கு விடுதலை பெற்றுத் தந்துவிட்டுத் தாய்நாடு திரும்பிய நமது ஜவான்களுக்கு எல்லைப் புறத்தில் அவரவர் விருப்பப்படி காப்பியோ டீயோ வழங்கி மகிழ்வித்தனர் புரூக் பாண்ட் ஸ்தாபனத்தார்.






மம் கிராமமாகச் சென்று அங்குள்ள இளம் பெண்களைத் தங்கள் 'வசதிகளுக்காக' லாரிகளில் ஏற்றிச் செல்ல முற்பட்டனர். இதனால் நான் தன்மானம் உள்ள மக்கள் தங்கள் வீடு, வாசல், உடைமைகளைத் துறந்து தலையில் தூக்கக்கூடிய சாமான்களைத் தூக்கிக் கொண்டு இந்தியாவை நோக்கி நடக்கத் தொடங்கினர். எந்தத் துறையில் குறைபாடுகள் இருந்தாலும் பெண்மணிகளைப் பேணிக் காத்த நாடு இந்தியா அல்லவா? அபயம் என்று அலறி ஓடிவந்த லட்சோப லட்சம் பெண்மணிகளுக்குத் தஞ்சம் கொடுக்க முன்வந்த பிரதமர் இந்திரா காந்தியை மனித குலம் மறக்க முடியாது. அகதிகளால் நமக்கு ஏற்பட்ட பளு என்பது மற்றொரு விஷயம்.

ஜெனரல் நியாஸியின் மனத்தில் என்னதான் இருந்திருக்க முடியும்? மக்களை அலறவைத்து, அறிவாளிகளை அழித்து, மாணவர்களை மாள வைத்தால் மக்கள் பணிந்து விடுவார்கள் என்பதே அவர் நினைப்பு. இதனால்தான் ஆதியில் யார், எந்த மதத்தினர் என்றுகூடப் பார்க்காமல் மக்களுக்கு மட்டற்ற தீங்கு இழைக்கப்பட்டது. பின்னர் ஒரு கட்டத்தில் பாகிஸ்தான் ராணுவத்தாரும் முஸ்லிம் லீகினரும் சேர்ந்து ஹிந்துக்களை மட்டும் கொடுமைப்படுத்த முற்பட்டனர். ஆனால் அவர்களுடைய நோக்கம் நிறைவேறவில்லை. ஹிந்துக்களின் வீடுகளையும் கடைகளையும் நிலங்களையும் பங்கு போட்டு முஸ்லிம்களுக்குக் கொடுத்தால் தங்களை வங்க முஸ்லிம்கள் ஆதரிப்பார்கள் என்று ஜெனரல் டிக்கா கானும் ஜெனரல் நியாஸியும் நினைத்திருக்கலாம். ஆனால் இவர்கள் வலையில் விழுந்தவர்கள் வெகு சொற்பம்.

முதலில் டாக்கா, சிட்டகாங் பகுதிகளில் கூட்டுக் குவித்துக் கொண்டிருந்த பாகிஸ்தான் ராணுவம் இந்திய எல்லைகளுக்கு வந்து விட்டது.

வங்க தேசத்துக்கு மேற்குப் பக்கம் மேற்கு வங்கமும், வடக்கே அஸ்ஸாமும் கிழக்கே திரிபுராவும் உள்ளன. சகஜமாக இந்த எல்லைகளில் எல்லைக் காவல் படைகள்தாம் இருப்பது வழக்கம். கிழக்கு வங்கத்தில் எல்லைக் காவல் படைகள் பாகிஸ்தான் ராணுவத்துக்கு முழுக்குப் போட்டுவிட்டு வங்க தேச இயக்கத்துக்கு ஆதரவு கொடுக்கத் தொடங்கி விட்டனவே! இதனால்தான் எல்லையில் 1971 ஏப்ரல் முதல் இந்திய துப்பாக்கியும் பாகிஸ்தான் துப்பாக்கியும் ஒன்றை மற்றொன்று உரசத் தொடங்கிவிட்டன. ஒரே வித்தியாசம் இந்திய எல்லையில் செயல்பட்டது இந்திய ராணுவம் அல்ல, எல்லைப் பாதுகாப்புப் படை. ராணுவம் அங்கு சென்று விட்டால் அதை அரைகுறை உத்தரவுகளால் கட்டுப்படுத்துவது உசிதம் அல்ல என்பதை இந்திய அரசு அறிந்தது.

அகதிகள் எண்ணிக்கை அதிகமாகிக் காட்டாறு மாதிரி வெள்ளம் பெருகவே இந்தியா உலக நாடுகளுக்கு முறையிட்டது. மக்களைக் கொன்று பிரச்னையைத் தீர்க்க முயலுகிறார்கள் பாக் ராணுவத்தார் என்பது பிரதமர் இந்திரா காந்தி அந்நிய நாட்டு விவகார மந்திரி ஸ்வரண் சிங், பாதுகாப்பு மந்திரி ஜகஜீவன்ராம் வரை சொல்லிவந்தது. தவிர, அகதிகளை லட்சக் கணக்கில் வைத்துப் பராமரிப்பது இந்தியப் பொருளாதாரத்துக்குச் சாத்தியமல்ல.



மார்ச் மாதம் முதல் டிசம்பர் வரை பல நாடுகளின் பிரதிநிதிகள் இந்தியாவில் உள்ள அகதிகள் முகாம்களுக்கு விஜயம் செய்து செயலாக வாழ்ந்தவர்கள் கட்டாந்தரையில் உருண்டு கஞ்சிக்குக் கப்பறையை நீட்டும் வாழ்வைக் கண்டு சென்றார்கள். கிட்டத்தட்ட எல்லோரும் தங்கள் அநுதாபத்தைத் தெரிவித்தார்கள். மக்களின் துயர் துடைக்க என்று பிறந்த கென்னடி சகோதரர்களில் எஞ்சியவரான இ. எட்வர்ட் கென்னடி பாகிஸ்தானை மாட்டு மாட்டென்று மாட்டினார்.

இ. கென்னடியும் அவருடைய ஆலோசகர்களும் முகாம் முகாமாகச் சென்று விவரங்களைச் சேர்த்துப் பாகிஸ்தான் ராணுவம் செய்த அக்கிரமங்களை அமெரிக்காவில் பறைசாற்றினர். பாகிஸ்தான் சாது, பக்கத்திலிருக்கும் இந்தியாதான் துஷ்டப் பையன் என்று ஜனாதிபதி நிக்ஸன் பரப்பிய பொய்களை அவர் தம் உண்மைகளால் வென்றார்.

வாரங்கள் செல்லச் செல்ல அகதிகள் எண்ணிக்கை அதிகரித்து அவர்களைப் பராமரிக்கும் செலவும் உயர்ந்தது. சர்வதேச நாடுகள் உதவ வாக்களித்தன. அகதிகள் முகாம்கள் அமைக்கப் பொருள்கள், பால் பவுடர், கம்பளி போன்றவை வந்தன. ஆனால் யானைப் பசிக்குச் சோளப் பொரி கொடுப்பதைப் போல் இவை நிலைமையை முழுதும் சமாளிக்கப் போதியதாக இல்லை. கிட்டத்தட்ட தினம் ஒன்றுக்கு இரண்டு கோடி ரூபாய்க்கு மேல் செலவு செய்ய வேண்டியிருந்தது.

இந்தியப் பொருளாதாரத்தை உடைக்க வென்று பாகிஸ்தான் செய்த சதி இது வென்று எதிர்த்தரப்புக் கட்சிகள் ஆர்ப்பரித்தன. சுமார் ஒரு கோடி அகதிகளுக்குத் தேவைகளைப் பூர்த்தி செய்ய இந்திய மக்கள் மேல் புது வரிகளைச் சுமத்துவதைத் தவிர இந்திய அரசு நம் நாட்டின் ஐந்தாண்டுத் திட்டத்தையும் குறைக்கும்படி ஏற்பட்டது.

இந்தியப் பிரதமர் அளவுக்கு மிஞ்சிய நிதானம் காட்டியதைப் பாகிஸ்தான் இந்தியாவின் பலவீனம் என்று கருதிவிட்டதோ என்னவோ? அது தடி எடுக்க முற்பட்டது. 1971ம் வருடம் டிசம்பர் மாதம் நான்காம் தேதி இரவு டில்லியில் சங்கு மேலும் கீழுமாக ஸ்தாயி மாறி ஊளையிட ஆரம்பித்தது. இது ஒரு பயிற்சிச் சங்கு என்று பொதுஜனங்கள் நினைத்து வழக்கம்போல் தங்கள் அலுவல்களைக் கவனிக்கலாயினர். ஆனால் அன்று சங்கு ஊதப்பட்டபோது பாகிஸ்தான் விமானங்கள் வட மேற்கு இந்தியாவில் உள்ள இந்திய விமானப் படைத் தளங்களைத் தாக்கின என்பது பின்னர் தெரிந்தது. அன்று பிரதமர் இந்திரா காந்தி கல்கத்தாவுக்குச் சென்றிருந்

# இரு இடங்களிலும் சிறப்பாக பணியாற்ற –

# பேருதவி புரிகிறது பிரஸ்டிஜ் Prestige

உங்களைப் போன்ற பெண்கள் அலுவலகம் செல்வதால் வீட்டு வேலைகள் தடைப்படாமலிருக்கவே தயாராகிறது பிரஸ்டிஜ் (ப்ரீத் என்பது இதன் ஏற்றுமதிப் பெயர்). ஆகவே உங்களால் இரு இடங்களிலும் சிரமமின்றி சிறப்பாகப் பணியாற்ற முடிகிறது.

நேரத்தை மிச்சப்படுத்துகிறது பிரஸ்டிஜ் (அல்லது ப்ரீத்), எப்படியெனில் எப்பொழுதையும் விட கால்பங்கு நேரத்திலேயே சமையல் தயார்!...அதுவும் பலவகைப் பதார்த்தங்களுடன்!

எரிபொருள் சிக்கனத்துடன், சமையல் அறையும் துப்புரவாக இருக்க உதவும், பிரிஸ்டிஜ்/ப்ரீத். ஆகவே திறமையாக செயல்பட வழி செய்கிறது. பிரஸ்டிஜ் அல்லது ப்ரீத் குக்கரில் தயாரான உணவுகளில் ஊட்டச்சத்தும் மிகுந்துள்ளது.

பிரஸ்டிஜ், ப்ரீத் இரண்டுமே வாழ்நாள் பூராவும் உழைக்க உத்தரவாதமுள்ளவை. மேலும் நாடு பூராவிலும் விற்பனைக்குப் பின் பராமரிப்புச் சேவை அளிப்பதும் இது ஒன்றே. உதிரி உறுப்புகள் எங்கும் கிடைக்கின்றன.

பரிவுடன் பேருதவியளிப்பது—பிரஸ்டிஜ்/ப்ரீத்.

பிரஸ்டிஜ் ஒன்று பெறுங்கள்—வேலைக்குச் செல்லும் பெண்மணியாகவும் வீட்டைப்பேணும் தலைவியாகவும் விளங்குங்கள்.







டி. டி. பிரைவேட் லிமிடெட், பெங்களூர் 1.

TTP-6175

தார். பாதுகாப்பு மந்திரி ஜகஜீவன்ராம் பாட்னு நகரத்துக்குச் சென்றிருந்தார்.



கடலில் ஒரு நாட்டுக் கப்பலை மற்றொரு நாட்டு யுத்தக் கப்பல் தாக்கினால் உடனே யுத்தம் மூளும். ஆனால் ஒரு நாட்டின் ஆகாய விமானங்கள் மற்றொரு நாட்டின் ஆகாயப் பகுதியில் பறந்தால் அது உடனடி பகை என்று கருதப்படுவதில்லை. ஏனென்றால் வேகமாகப் பறக்கும் சண்டை விமானங்கள் ஒரு நிமிடம் திசை தவறினால்கூட 20 மைல் தூரம் மற்ற நாட்டின் ஆகாயப் பகுதிக்குள் நுழைந்துவிடலாம். டிஸம்பர் நான்காம் தேதி தாக்குதல் இந்த ரகத்தைச் சேர்ந்ததல்ல. இஸ்ரேல் 1967ல் எகிப்தைத் திடுதிப்பென்று தாக்கவில்லையா? அப்படித் திடீர்த் தாக்குதலில் எகிப்தின் விமானப் படை அழிக்கப்பட்டது. அதே மாதிரி இந்திய விமானப் படையை அழிக்க வேண்டும் என்பதுதான் பாகிஸ்தானின் நோக்கம். ஆனால் அது ஏமாந்தது.

இன்று உள்ள அரசியல் முறையில் ஒரு நாடு மற்றொரு நாட்டைப் பற்றி உளவு அறிந்துகொள்ள முயலுகிறது. அதுவும் இரு நாடுகளும் பரஸ்பரம் பகைமை காட்டும் நாடுகளாக இருந்துவிட்டால் கேட்கவே தேவையில்லை.

பதான்கோட், அமிர்தசரஸ், ஜோத்பூர், ஸ்ரீநகர், சர்ஸாவா, ஆக்ரா போன்ற தளங்களில் சண்டை விமானங்களும், சண்டை செய்து குண்டு பொழியும் விமானங்களும் உண்டு. பாகிஸ்தானை நம்பக் கூடாது என்று 1965க்குப் பிறகு தெளிவாகி விட்டதல்லவா? ஆகையால் பதான்கோட், அமிர்தசரஸ் போன்ற விமானக் கூடங்களில் காங்கிரீட் விமான விடுதிகள் கட்டப்பட்டு அதன் மொட்டைக் கூரைகளில் மண் பரப்பப்பட்டுச் செடி கொடிகள் பயிரிடப்பட்டன. இதனால் ஆகாயத்திலிருந்து பார்த்தால் கீழே உள்ளது என்னவென்று தெரியாது. ஆகாய விமானப் படைத் தளபதி ஏர்மார்ஷல் பி. ஸி. லால் என்னிடம் சொன்னார்: ''பாகிஸ்தான் விமானிகள் கிலி காரணமாகக் குண்டுகளை இலக்கு தவறி வீசினார்கள். 1965ம் வருட சண்டையில் வெகு வேகமாகப் பறக்கும் விமானங்களால் நமக்கு அநுகூலம் இல்லை என்று தெரிந்தது. தவிர எங்களுக்கு உளவு தக்க சமயத்தில் கிடைத்ததால் நம் விமானங்களைப் பத்திரப்படுத்தியிருந்தோம்.''

டிஸம்பர் நான்காம் தேதி நள்ளிரவில் இந்தியப் படைகள் பாகிஸ்தானை நோக்கி இரு முனைகளிலும் முன்னேறலாயின. இந்திய அரசின் மந்திரிசபைகூடி ஆலோசித்து இனி காலம் தாழ்த்தக் கூடாது என்று முடிவு செய்தது.

டிசம்பர் நாலாம் தேதி சம்பவத்துக்கு முன்னாலேயே கிழக்குப் பகுதியில் மோதல்கள் ஆரம்பித்து விட்டன. பாகிஸ்தான் பீரங்கிகள் இந்தியப் பகுதிக்குள் தாக்கியதும் இந்தியப் பீரங்கிகள் பதிலுக்கு முழங்கின. பின்னர் இந்தியப் படைகள் பாகிஸ்தானுக்குள் சென்று டாங்கி சகிதம் போரிட்டுப் பாகிஸ்தான் படைகளைப் பின்னடையச் செய்தன. இதனால் பொதுவாக இந்தியப் படைகள் ஜரூராகவே இருந்து வந்துள்ளன. எவ்வித தங்கு தடையும் இல்லாத யுத்தம் என்றதும் மளமளவென்று இந்தியப் படைகள் மேற்கு வங்கத்திலிருந்தும் அஸ்ஸாமிலிருந்தும் திரிபுராவிலிருந்தும் பாகிஸ்தானுக்குள் முன்னேறத் தொடங்கின.

இந்தியப் படைகள் நோக்கிலிருந்து இந்த யுத்தம் மிகவும் வரவேற்கப்பட்டது. ஏனென்றால் 1962ல் இவைகளுக்கு ஏற்பட்ட அபக்கியாதியை அகற்ற இது ஒரு மாபெரும் வாய்ப்பு. 1962ல் இந்திய ராணுவத்தில் தலைமை என்பது மந்திரி கிருஷ்ண மேனனிடம் இருந்தது. அன்றாட அலுவல்களில் தலையிட்டு அவர் உயர்மட்டத்தில் எவ்வித நம்பிக்கையும் இல்லாது செய்து விட்டார். தவிர, அஸ்ஸாமுக்கு அனுப்பப்பட்ட லெப்டினன்ட் ஜெனரல் கௌல் யுத்த அநுபவம் கொஞ்சமும் இல்லாதவர்.

இடையே கழிந்த வருடங்களில் இந்திய ராணுவத்தில் பல மாறுதல்கள் உண்டாகி, பிரதம சேனாதிபதி கொள்கை அளவு விஷயங்களைத் தவிர மற்றவைகளில் ஈடுபடவில்லை. இதனால் ஒவ்வொரு முனையிலும் உள்ள தளபதிகள் சுதந்திரமாகச் செயல்பட்டனர்; ஆர்வமும் காட்டினர். கிழக்குப் பகுதியில் லெப்டினன்ட் ஜெனரல் அரோராவும் மேற்குப் பகுதியில் லெப்டினன்ட் ஜெனரல் காண்டேத்தும் சிங்கங்களைப் போலச் சீறி எழுந்து ஜவான்களுக்கும் கீழ் மட்டத்தில் உள்ள அதிகாரிகளுக்கும் உற்சாகமூட்டி வெற்றி கண்டனர்.

வங்க தேசத்தில் யுத்தம் மூண்ட தினம் பாகிஸ்தானுக்கு நான்கு அல்லது ஐந்து டிவிஷன் பலம் இருந்தது. அதாவது 60,000 பேர்கள். இதைத் தவிர, சுமார் 35,000 மற்ற (தகுதியில் ராணுவத்துக்குக் கொஞ்சம் குறைந்த) படைகளும் இருந்தன. இவை ஜெஸ்ஸோர், டாக்கா, கொமில்லா—கன்டோன்மென்டில் (ராணுவ கேந்திரங்கள்) இருந்தவை. ஆகவே, முதல் கட்டத்தில் ஜெஸ்ஸோர் கேந்திரத்தில் துவந்த யுத்தம் நடக்கும் என்று எதிர்பார்க்கப்பட்டது. ஆனால் அங்கு நடந்த யுத்தம் வெகு சாதாரணமானது. பிறகு கொமில்லாவில் பயங்கரத் தாக்குதல் இருக்கும் என்று எதிர்பார்த்தார்கள். ஆனால் இதுவும் ''புஸ்'' வாணமாகி விட்டது. இறுதியில் டாக்காவில்கூடப் பெரிய அளவு யுத்தம் நடக்கவில்லை. ஏன் ?

லெப்டினன்ட் ஜெனரல் அரோரா ரத்னச் சுருக்கமாகச் சொன்னார். ''நம் படைகள் பெரிய கேந்திரங்களைப் பிடிக்க வேண்டும் என்று முனையாமல் அவைகளைச் சுற்றி வளைத்துக் கொண்டு முன்னேறின. எதையெல்லாம் பிடித்தோமோ, அவைகளைப் பாதுகாக்கும் பொறுப்பு முக்திவாஹினிக்குக் கொடுக்கப்பட்டது. பல இடங்களுக்குப் பின்வாங்கிய பாகிஸ்தான் துருப்புகளுக்கு முன்னாலேயே நம் படைகள் போய்ச் சேர்ந்து, கோழிக் குஞ்சுகளை அமுக்குவது போல் அமுக்கிவிட்டன. ஆனால் எல்லாவற்றுக்கும் மேலான காரணம் பாகிஸ்தான் துருப்புகளுக்குப் பொதுஜன ஆதரவுக்குப் பதிலாக அவர்கள் மீது வெறுப்பு இருந்ததே !''

(தொடரும்)

# அம்மா

ரா. கணபதி

## 23. அகத்திலும் அடக்கம், புறத்திலும் அடக்கம்

"நான் தேவத்தன்மை பெற்றது எப்படித் தெரியுமா? நான் காஷாயம் உடுத்தவில்லை. மரவுரி போர்த்தவில்லை. தலையை மழுக்கிக் கொண்டோ, அல்லது ஜடை வளர்த்தோ துறவிக் கோலம் போடவில்லை. நான் தெய்வத்தன்மை பெறுவதற்காகச் செய்ததெல்லாம் இதுதான்: என் கணவருக்கு வேண்டாத சொல்லை நான் பேசியதில்லை; அவருக்கு வேண்டாத செயலை நான் செய்ததில்லை. தேவர்களுக்கும் பித்ருக்களுக்கும் முறைப்படி கடமை செய்தேன். மாமனார் மாமியாருக்கு அடங்கி நடந்தேன். நான் கோள் சொன்னதில்லை. நிற்கத் தகாத இடத்தில் நின்றதில்லை. அதிகம் பேசியதில்லை. தவறாகச் சிரித்ததில்லை. இந்தத் தர்ம மார்க்கத்தைச் சிரத்தையுடன் பின்பற்றும் எவளும் அருந்ததியின் அருகில் வைத்து ஆராதிக்கப்படுவாள்."

— மகாபாரத அநுசாஸன பர்வத்தில் சாண்டிலி எனும் பதிவிரதை.

சாரதை மந்திரம் என்று எதுவும் போடவில்லை. ஆயினும் அவள் அளித்த வில்வ பத்திரம் காளிபாத கோஷின் நடத்தையையே மாற்றி விட்டது! அவரை மனைவிக்கு 'வச'மாக்கி விட்டது! சாரதையின் 'வசிய' சக்தியைப் பற்றி இங்கே சிறிது கவனிக்கலாம்.

ஒரு நாள் அவள் தாம்பூலச் சுருள் தயாரித்துக் கொண்டிருக்கையில் ஏலம், கிராம்பு, ஜாதிபத்திரி முதலிய வாசனைப் பொருள்கள் மிகக் குறைவாக இருக்கக் கண்டாள். எனவே சிலவற்றில் மட்டுமே வாசனைப் பொருள்களை வைத்து மடித்தாள். இதைக் கவனித்தாள் யோகின்-மா.

''ஏன் இப்படி இரண்டு தினுசாகப் பீடா செய்கிறீர்கள்? இருக்கிற வாசனைத் திரவியங்களை நிரவி எல்லாத்திலேயும் வைக்கப் படாதோ?'' என்று சாரதையைக் கேட்டாள் யோகின்.

''யோகேன், வாசனை போட்ட பீடா இங்கே வர பக்தாளுக்கு. சின்னச் சின்ன விஷயத்திலேகூட அன்பும் அக்கறையும் காட்டி அவாளை என்னுடையவாளா ஆக்கிக்கணும். அதனால்தான் இருக்கிற அத்தனை வாசனைத் திரவியத்தையும் அவாளுக்கே பகிர்ந்து வச்சுடறேன். வெறும் பீடா இருக்கே, அது டாகூருக்கு. அவர்தான் ஏற்கனவே என்னவர் ஆச்சே!'' என்று அற்புதமாகப் பதில் சொன்னாள் அம்மா.

அன்பின் சக்தியே அவளது வசிய மந்திரமாக இருந்தது. 'மந்திரம்' என்று சொல்லப்படும் அட்சரத் தொகைகளைக் கொண்டும் அற்புதம் செய்யலாம். ஆனால் அன்பினால் மட்டுமின்றி, சுய லாபத்துக்காகவும் இந்த அக்ஷரபூர்வமான மந்திரங்களைப் பயன் செய்து கொள்ளலாம். பூரண அன்பு வந்து விட்டால், அப்புறம் எந்த மந்திரமும் வேண்டாம்! மந்திரம் போடாமலே எந்த அநுக்கிரகமும் செய்து விடலாம். நமது சிறிய மனசு இருக்கிற வரையில் அதில் சுய ஆசைகளும் எழும்பும். எனவே பூரண அன்பு செலுத்த முடியாது. இந்த மனசை ஸ்வாதீனம் செய்து கொண்டு விசுவ மனசில் கரைந்து விட்டால் பூரண அன்பு தானே வந்து விடும். மணி, மந்திரம் இல்லாமலே அது எந்த அற்புதமும் செய்து விடும். இப்படித்தான் சொல்கிறார் ஸ்ரீ தியாகையர், 'மனசு ஸ்வாதீனமை' என்கிற கிருதியில்.

ஒருவரைத் தவறான வழியிலும் செலுத்தக்கூடிய ஹேதுவுடைய மந்திர சக்திக்கும், ஒருகாலும் தவற்றுக்கு ஆட்படுத்திவிடாத அன்பின் சக்திக்கும் உள்ள வித்தியாசத்தைச் சாரதையின் மூலம் நிரூபித்திருக்கிறார் ராமகிருஷ்ணர்.

ஒரு நாள் ராமகிருஷ்ணர் கை கழுவுவதற்கு நீர் ஊற்றிக் கொண்டிருந்தாள், யோகின்-மா.

கொப்புளிக்கும்போது அவரது நெஞ்சிலே ஒரு தமைச்சல் உண்டாயிற்று.

''பொன்னுக்கு வீங்கி வரும் போல இருக்கு. யோகேன், இதைக் குணப்படுத்தற மந்திரம் உனக்குத் தெரியுமே? அதை ஜபியேன்'' என்றார்.

'தனக்கு அந்த மந்திரம் தெரியும் என்று அவருக்கு எப்படித் தெரிந்தது?' யோகின் மா வியந்தாள். அதைப்பற்றி அவரிடம் கேட்டால் விடை கிடைக்காது என்று அவளுக்குத் தெரியும். மந்திரத்தை ஜபித்தாள்.

பிறகு சாரதையிடம் வந்து ''எனக்கு இந்த மந்திரம் தெரியும்னு அவருக்கு எப்படித் தெரியும்?'' என்று வினவினாள்.

அம்மா இளநகை பூத்தாள். ''அன்பே! அவருக்கு எல்லாரைப் பத்தியும் எல்லாமும் தெரியும். ஆனாலும் யார் கிட்டேயும் அவருக்குக் கோபம்

வந்ததில்லை. குறிப்பா ஒருத்தருக்கு எண்ணம் நல்லதா யிருந்தா, அவா எதைச் செஞ்சாலும் அதை அவர் ஆட்சேபிக்கவோ, கோபிக்கவோ மாட்டார். பயப்படாதே யோகேன்! எனக்கும் கூட இந்த மந்திரம் தெரியும். கிராமத்திலே இருக்கச்சே கத்துண்டேன். அவர், 'இதிலே நீங்கு ஒண்ணும் இல்லை. ஆனாலும் உனக்கு எதுக்கு இதெல்லாம்? இஷ்ட தெய்வத்தின் காலிலே அதைச் சமர்ப்பணம் பண்ணி சமாப்தி ஆக்கிடு'ன்னார். அப்படியே பண்ணிட்டேன்.''

மந்திர சக்தியால் வியாதி முதலியவற்றைத் தீர்ப்பதும்கூட மிக உயர்ந்த நிலையில் உள்ளவர்களுக்கு அவ்வளவாக உகாத விஷயம் என்று தெளிவாகிறதல்லவா? ஆயினும் ஞானத்துக்கு மட்டுமே உதவும் விஷயங்களில் மந்திர ஜபத்தின் மூலம் சீடர்களுக்கு அனுக்கிரகம் தருமாறு சாரதையை ராமகிருஷ்ணரே ஊக்கியிருக்கிறார்.

சாரதா பிரஸன்னு என்ற சீடப் பையன் அவரிடம் மந்திரோபதேசம் கோரினான்.

''எலே, அம்மாவைக் கேளுடா! அசாத்தியமா அனுக்கிரகம் பண்ணுவா'' என்றார் அவர்.

நறவத்தில் அடைந்து கிடந்த அந்த அம்மாவுக்கு அவ்வளவு ஆற்றல் உண்டு என்று சாரதா பிரஸன்னுவுக்குத் தோன்றவில்லை. தயங்கி நின்றான்.

ராமகிருஷ்ணர் பிரஸன்னுவின் முகத்தைப் பார்த்துப் பிரஸன்ன முகத்துடன் பாடினார்:

**ராதையின் மாயா சக்திக்(கு)எல்லை**
**பேதையர் அறிவோமா ?**
**கோடி கண்ணனை ராமனைப் பெற்று**
**கோடி கண்ணனை ராமனை வளர்த்து**



**கோடி கண்ணனை ராமனைக் கரைத்த ஈடில் ஆற்றல் அதுவன்றோ?**

அந்த ஈடில்லாத ஆற்றல் அன்பு தந்த ஆற்றலேயாம். அந்த ஆற்றலால்தான் தேவி சாரதை காலை மணி மூன்றி லிருந்து இரவு பன்னிரண்டு மணி வரையில், அலுப்பின்றி, சலிப்பின்றி, கசப்பின்றி, கடுப்பின்றி உழைத்தாள்.

ஐந்து மணிக்குள் ஸ்நானம், ஜபத்தை முடித்துவிட்டு நஹுவத் மாடிக்குக் கீழே சமையலைத் தொடங்கி விடுவாள். சமையல் இடத்துக்கும் சாமான் உள்ளுக்குமாக அலையும்போது, ஆரம்ப காலத்தில் அங்குள்ள தாழ்ந்த வாசற் படியில் எத்தனையோ முறை முட்டிக் கொண்டிருக்கிறாள்!

சமையல் முடிந்த பின் கணவரின் அறையில் ஆடவர் நடமாட்டம் இல்லாமலிருந்தால் அவரது திருமேனியில் தைலம் தேய்த்து விடுவாள். அவர் கருக்காகப் பத்தரை மணிக்கு உண்ண வருவார். எனவே அவர் தைலம் ஊறி, ஸ்நானத்துக்குச் சென்ற வுடனேயே இவள் அவருக்காகத் தாம்பூலச் சுருள் செய்யத் தொடங்கி விடுவாள். அவர் அமருவதற்கு விரிப்புப் போட்டு, அருந்துவதற்குக் குவளையில் நீரும் எடுத்து வைப்பாள். பிறகு நஹுவத்துக்கு வந்து தாலத்தில் உணவெடுத்துப் போவாள். சாப்பாட்டு விஷயத்தில் குழந்தைபோல் பயப்படும் கணவரை 'ஏமாற்றி' அவரது திருவுதரத்தை நிரப்புவதில் சாரதையின் சாதுரியம் அதிசயமானது. அவர் கண்களில் அன்னம் அதிகமாகத் தோன்றி விடக் கூடாது என்பதால் அதை அமுக்கிப் பிசைந்தே எடுத்துச் செல்வாள்.

இந்த ஏமாற்று வித்தைக்கு இன்னொர் உதாரணம்: ஒரு முறை அவருக்கு உடல் நலம் குன்றியபோது அவர் பாலைத் தவிர வேறு எவ்விதத்திலும் திரவச் சேர்க்கையுள்ள பண்டங்களை உண்ணக் கூடாது என்று வைத்தியர் கங்கா பிரசாத் ஸேன் விதித்தார். "ஜலமே இல்லாமல் எப்படி இருப்பேன்?" என்று ஐந்து வயதுக் குழந்தை உட்பட சகலரையும் வினவினார் பச்சைக் குழந்தை ராமகிருஷ்ணர். சாரதையிடம், "மாதுள முத்திலேகூட ஜலத்தைப் பிழிஞ்சு எடுத்துட்டுத்தான் தரணும்" என்றார்.

சாரதை அந்தப் பரிதாப நிலையிலும் சிரித்துக் கொண்டாள். மாதுளை முத்தில் ஜலத்தை வடித்தால் அப்புறம் கொட்டைதானே நிற்கும்? "நீங்க ஏன் அதையெல்லாம் பற்றிக் கவலைப் படறேள்? காளி கிருபையில் எல்லாம் சரியா நடக்கும். எங்களாலே முடிஞ்சதை நாங்க செய்யறோம்" என்றாள்.

அவளால் முடிந்த ஏமாற்றுச் சாதுரியத்தைத் தொடங்கி விட்டாள். கோயில் பால்காரனைக் கூப்பிட்டு, "உன்னால் எவ்வளவு பால் தர முடியும்?" என்று கேட்டாள்.

"எவ்வளவு வேணாலும் தரேன். தாயே! அங்கே காளிக்குன்னு தர்றதிலே முக்கால்வாசிப் பாலை ஐயமாருங்களே குடிக்கறாங்க. இங்கே தந்தா நம்ம சாமி வவுத்துக்குன்னு போவும்?" என்று சொல்லி அவன் சுமார் இரண்டு சேர் பால் கொடுக்கலானான். சாரதை அவனுக்கு ஏகப்பட்ட பிரசாதங்களைக் கொடுப்பாள்.

ஆலயத்திலிருந்து வந்த பாலோடு ராமகிருஷ்ணருக்கென்றே வழங்கப் பட்ட பாலையும் சேர்த்துச் சுண்டக் காய்ச்சுவாள். நாலு சேரை இரண்டு சேராக்கிப் பதிதேவருக்குக் கொஞ்சம் கொஞ்சமாகத் தம்ளரில் விட்டுத் தருவாள்.

"நீ பாட்டுக்கு விட்டுண்டே இருக்கியே! எனக்கு ஒரு சேருக்கு மேலே ஏத்துக்காது" என்று கூறும் அந்தக் குழந்தை.

"இது ஒரு சேர்தான்னு" என்பாள் தாய்.

"இல்லே. ஜாஸ்தி. எனக்கு வயிறு முட்டறது."

"ஒண்ணும் ஜாஸ்தி இல்லே. ஒண்ணுங்கிறதுக்குப் பதில் ஒண்ணே கால் சேர் இருக்கும். திருஷ்டியாட்டமா இந்தக் கணக்கெல்லாம் கேட்காதேள்."

ராமகிருஷ்ணக் குழந்தைக்கும்கூட சந்தேகம் உண்டாகி விட்டது. ஒரு நாள் கோலாப்–மாவை அழைத்து, "அம்மா எனக்காக எவ்வளவு பால் வாங்கறா, தெரியுமா?" என்றார்.

விஷயம் தெரியாத கோலாப் அம்மை "நாலு சேர்" என்று பொத்தைப் பூசணிக் காயை உடைத்து விட்டாள்.

"ஆஹா! நாலுசேரா! அதுதான் எனக்கு அஜீர்ணமாயிருக்கு! எங்கே கூப்பிடு அவளை" என்று அமர்க்களப் படுத்தினார் ராமகிருஷ்ணர்.

சாரதை வந்தாள். குற்றக் கூண்டில் நின்று கொண்டு, அன்பு என்ற குற்றத்தைத் தொடர்ந்து துணிச்சலுடன் செய்தாள். "இந்தக் கோலாப்புக்குத் தோராயமாக்கூட அளவு சொல்லத் தெரியாது. இவ வார்த்தையைக் கேட்டுண்டா இப்படி மாய்ஞ்சு போறேள்?" என்று பதியைக் கேட்டாள்.

கோலாப் விடாப்பிடியாக, "இங்கேயிருந்து ஒரு பேலா பால் போறது; காளி




# நன்றி- நீடித்த டுலக்ஸுக்கு

## டுலக்ஸ், முற்றிலும் அப்பழுக்கற்ற ஒரே சீராக அழகுடன் ஆண்டுக்கணக்கில் நீடித்திருக்கின்றது

**உங்கள் வீட்டிலும் நீடித்திருக்கின்ற டுலக்ஸ் பெயின்ட் பூசியிருக்கிறீர்களா? அதன் செலவு, நீங்கள் நினைப்பதைவிட குறைவுதான்.**

★ **பரந்த பரப்பிற்கு பூசக்கூடியது:** ஒரு லிட்டர் டுலக்ஸ் கொண்டு அப்பழுக்கில்லாமல் விரிவாக பரந்த இடத்திற்குப் பூச முடியும்-இதனை குறைவாக உபயோகிக்கிறீர்கள் ஏனெனில், உங்கள் தேவை குறைந்துள்ளது.

★ **பூரணமாகக் கழுவக்கூடியது:** சோப்பு-நீர் கொண்டு கறைகள், தூசு அழுக்கு ஆகிய வற்றை சுலபமாகக் கழுவிவிடலாம்.

★ **மங்காத, உரிந்துபோகாத முற்றிலும் ஒரே சீரான பரப்பு:** தரப்பரிசோதனை செய்யப்பட்ட கூட்டுப்பொருள்களினாலானது டுலக்ஸ்.

**தேர்ந்தெடுக்க 121 வண்ணஜாலம்:** உங்களுக்குகந்தது எந்த நிறம் என்று நீங்கள் எப்பொழுதாவது எண்ணியதுண்டா? தேர்ந்தெடுக்கப்பட்ட அநேகவித நிறங்களுள் உங்கள் வீடு அழகுடன் திகழ்வதற்கு உள்ளம் உற்சாகமூட்டும் எண்ணிறந்த நிறத்திட்டங்கள் இருக்கின்றன. உங்கள் கன்ட்ராக்டருடன் கலந்து பேசி அவரது ஆலோசனையைக்கேட்டு டுலக்ஸ் நிறவகை அட்டையைப் பாருங்கள்.




டுலக்ஸ்–தயாரிப்பவர்களும் விற்பனையாளர்களும்:
தி ஆல்கலி அண்டு கெமிகல் கார்ப்பரேஷன் ஆப் இந்தியா லிமிடெட்

டுலக்ஸ்-இம்பீரியல் கெமிகல் இண்டஸ்ட்ரீஸ் லிமிடெட், லண்டனின் டிரேட் மார்க். பதிவுபெற்று உபயோகிப்பவர்கள்: தி ஆல்கலி அண்டு கெமிகல் கார்ப்பரேஷன் ஆப் இந்தியா லிமிடெட்

ACCI(P) 6667

## கல்வி

மனிதனின் இயற்கையான நிறைமைகள், இயற்கையாக உற்பத்தியாகும் செடிகளைப் போன்றவை. இவற்றில் நல்ல செடிகளோடு கெட்ட தழைகளும் உண்டாகக்கூடும். தழைகளைக் கழிப்பதற்கு உதவுவதே கல்வி. ஆனால் படிப்பறிவையே முக்கியமாகக் கருதினால் அதுவே தழையாக மண்டிவிடும் என்பதையும் கவனத்தில் கொள்ள வேண்டும்.

-- சேந்தமங்கலம் ஸ்ரீ அவதூதஸ்வாமிகள்

கோயில்லேயிருந்து ஒரு பேலா போறது. நீங்களே கணக்குப் பார்த்துக் கோங்கோ'' என்றாள்.

சாரதையைக் கண்டிப்புடன் பார்த்தார் ராமகிருஷ்ணர். அதைவிடக் கண்டிப்புடன் அவரைப் பார்த்தாள் சாரதை. ''இதோ, பாருங்கோ! அந்தப் பேலா எத்தனை 'பாவு' பிடிக்கும்னு கணக்குப் போட வேண்டாம். சாப்பாட்டுக்கா கணக்குப் பார்ப்பா? நான் கொடுக்கிறதைச் சாப்பிடுங்கோ'' என்றாள்.

''நீ சொல்றது வாஸ்தவம்தான். ஆனா எனக்கு அஜீர்ணம் வந்துடுத்து'' என்றார் அவர்.

அது வரை அஜீர்ணமே வரவில்லை. இன்று விஷயத்தைத் தெரிந்து கொண்ட பின் மெய்யாகவே அஜீர்ணமும் வந்து விட்டது. அன்றிரவு ஜவ்வரிசிக் கூழ் மட்டுமே சிறிது உண்டார்.

கோலாப் அம்மை அழமாட்டாக் குறையாக சாரதையிடம் வந்து, ''நீங்க முன்னாடியே எங்கிட்டச் சொல்லியிருக்கக் கூடாது? என்னாலே டாகூர் ஆகாரமே பாழாச்சு'' என்றாள்.

''பரவாயில்லே. இத்தனை நாளா நிறையப் பால் சேர்த்ததுலே அவர் உடம்பு தேறிடுத்து. ஆனா, பொதுவாக ஒண்ணு தெரிஞ்சுக்கோங்கோ. சாப்பாட்டு விஷயத்திலே பொய் சொன்னா தோஷமே கிடையாது. அவரை ஏமாற்றியும், கெஞ்சியும், தாஜாப் பண்ணியும் தான் சாப்பிடச் செய்யவேண்டியிருக்கு'' என்றாள் அன்னபூரணியான சாரதை.

அவள் ஒருத்தியால்தான் அந்தப் பணியைச் செய்ய முடியும். அவரும் அவள் ஒருத்தி கையாலேயேதான் உணவு பெற்றார். அதிலே அவளுக்கு ஏக மகிழ்ச்சி.

அந்த மகிழ்ச்சியுடன் அவள் பரிமாறிக் கொண்டிருந்தபோது, அவர் சிந்தனை வயப்பட்டவராக மெல்ல மொழிந்தார்: ''என்னிக்கு நான் எல்லார் கையிலேயிருந்தும் சாப்பாடு வாங்கிக்கறேனோ, அப்போ எனக்குப் போங்காலம் வந்துடுத்துன்னு தெரிஞ்சுக்கோ!''

சாரதையின் ரத்தம் உறைந்தது!

உணவு வேளையில் ராமகிருஷ்ணருடன் இருக்கும் ஆடவர்களுக்கு அம்மா வரப் போவதைத் தெரிவித்ததும் அவர்கள் வெளியேறி விடுவார்கள். அதன் பின்பே தேவி உணவு எடுத்து வருவாள்.

சாரதாமணி இவ்விதம் கடுமையாகக் கோஷா முறை அநுஷ்டிப்பதை ராமகிருஷ்ணர் மிகவும் விரும்பி வரவேற்றார். ஆதியில் காமார்புகுரில் அவள் சிறுமியாக இருந்தபோது, அவள் இருந்த அறையில் ஒரு சாளரம் அமைக்கப்பட்டதையே அவர் ஆட்சேபித்திருக்கிறார். ''தெருவைப் பார்த்துச் சாளரம் வைக்கறது சரியில்லே. குடும்ப ஸ்திரீகள் தெருவோடு போறவா, வரவாளைப் பார்க்கறதும், அவா இவாளைப் பார்க்கறதும் நல்லதுக்கில்லே'' என்று முடிவாகக் கூறிவிட்டார்.

கிராமத்தில் தலையை வெளிக் காட்டாத பெண்கள் கல்கத்தா போன்ற நகரத்துக்கு வந்தபிறகு ஆடவர்களோடு ஓரளவு பழகுவதை அவர் பார்த்திருக்கிறார். சாரதை தக்ஷிணேசுவரத்துக்கு வந்த புதிதில், கிராமத்துப் பெண்ணாகிய அவள் இங்கு பலவிதமான மனிதர்கள் கூடுவதைப் பார்த்து, வம்புக்கு ஆர்வம் கொண்டு அவர்களோடு பழகத் தொடங்கி விடுவாளோ என்று ராமகிருஷ்ணர் சிறிதே ஐயமுற்றார். ஆனால் சிறிது நாட்களிலேயே அவரது ஐயம் தீர்ந்து அவர் ஹ்ருதயரிடம் சின்ன 'மாமி'க்கு நற்சாட்சிப் பத்திரம் வாங்கித் தந்தார். ''ஏகடா, இந்தக் கிராமாந்தரக் குட்டி, நாகரிகம் என்ற பெயரில் அநாகரிகமாக நடந்துவிடப் போகிறதேன்னு பயந்தண்டு இருந்தேன். சின்ன மாமி இந்தப் புதுச் சூழலுக்குத் தன்னை அற்புதமா சரிப் பண்ணிண்டுட்டா'' என்றார். இதைக் கேள்விப்பட்டபின் அதுவரை தன்னையறியாமல் இயல்பாக அடங்கியிருந்த சாரதை கோஷா முறையில் அதிக சிரத்தையும் கவலையும் எடுத்துக் கொண்டாள். 'அவர் நினைக்கிறதை எல்லாம் அம்பாள் நடத்தி வெச்சுடுவளே! நான் அசட்டுப் பிசட்டுன்னு நடந்துடுவேனோன்னு அவர் பயப்பட்டால், அந்த பயமும்கூட நிஜமானாலும் ஆயிடும். அகஸ்மாத்தாக எப்போவாவது நான் வெளியிலே நின்னாக்கூட அது அவர் கண்ணுலே பட்டுவிடுமே!' என்று பயந்தாள் அவள். ''ஜகதீசுவரி, அவர் எதிர்பார்க்கிற அளவுக்கு என் மானத்

தைக் காப்பாற்றுடியம்மா'' என்று வேண்டிக் கொண்டாள். அச்சம், நாணம், மடம், பயிர்ப்பு இவற்றுக்கு ஒரு மூர்த்தியே ஆனாள். இன்று நம் அம்மா உலகப் பிரசித்தி பெற்று, ஓரளவு நவகால அவதார வியக்தியாக வணங்கப் படுவதால், நவீன கால 'பெண் விடுதலை'க்கும் அவளை மூர்த்தியாக்கிப் பலர் எழுதியும் பேசியும் வருகிறார்கள். ஆனால் இந்த 'விடுதலை'க்கு நம் அம்மா முன்னோடி என்று எண்ணுவதற்கு அவளது சரிதத்தில் சான்று எதுவும் காணோம்! பெண்கள் இப்படித்தான் இருக்க வேண்டும் என்றே ராமகிருஷ்ண ரும் கூறி வந்திருக்கிறார்.

ஒரு முறை சாரதையோடு லக்ஷ்மியும் நஹபத்தில் இருந்தபோது, அம்பாள் பிரசாதங்களை அவர்களுக்கு அளித்துவர ஹ்ருதயரை அனுப்பினார் ராமகிருஷ் ணர். ஹ்ருதயர் அவர்களோடு பல விஷயங்களைச் சிரித்துப் பேசிவிட்டுத் திரும்பினார். ராமகிருஷ்ணருக்குக் கடும் கோபம் வந்துவிட்டது. ''பெண்டுகளி டத்தில் பட்டுக் கத்திரிச்சாப்போல் காரி யத்தை முடிச்சுண்டு வரணும். இனி மேல் இந்த மாதிரி அவாகிட்டே வம்பளந்திண்டு நின்னியோ, தெரியும் சேதி'' என்று கடிந்து கொண்டார். ராமலாலிடமும் ''சித்தி, அக்கான்னு அவாகிட்டே சும்மா பேசப்படாது'' என்று கண்டித்து வைத்திருந்தார்.

உலக மாதா தன்னை ஒளித்துக் கொண்டே உயிரினங்களுக்கு அருள் செய்வது போலவே சாரதை, முக்காட் டில் தன்னை மறைத்துக் கொண்டே அம்மாவாக அன்பு செய்து வந்தாள். முக்காட்டுக்குள் பதுக்க முடியாத அன்னை யன்பை இந்தக் கோஷா ராணி பரி பூரணமாக ஆற்றியது உலக அதிசயம் தான்! சாரதை தக்ஷிணேசுவரத்துக்கு வந்து பல்லாண்டுகள் ஆன பிற்பாடு ஒரு நாள் ஆலயக் கணக்காயர் சொன்ன ராம்: ''பட்டாசாரியாருடைய பத்தினி யும் இங்கேதான் இருக்காங்கன்னு சொல் லிக்கறா. ஆனால் அவங்களைப் பற்றிக் கேள்விதான் படறேனே ஒழிய, கண் ணாலே கண்டதில்லே.''

கோஷா முறையின் கடுமையை எப் போது தளர்த்த வேண்டும் என்பதும் ராமகிருஷ்ணருக்குத் தெரியும். கோஷா முறைக்கு நளினமாக, லளிதமாக 'விடு முறை'யும் அவ்வப்போது தருவார். மேனி வண்ணத்தில் பக்தர் ஒருவரையும், தம்மையும் எடை போட்டுத் தீர்ப்புச் சொல்லுமாறு அவர் சாரதையைப் பணித்ததை இதற்கு ஓர் உதாரண மாகச் சொல்லலாம்.

> **காலனும் காமனும்**
>
> காலன், காமன் என்ற இருவரில் காலன் நமக்குப் பிரியமில்லாதவனாகத் தோன்றினா லும் அவனே நமக்கு நல்லது செய்கிறான்; காமனோ நமக்குப் பிரியமானதைச் செய்வதா கத் தோன்றினாலும் அவனே நமக்குக் கேடுதல் செய்கிறான். — ஆதிசங்கரர்

பெண்கள் அடங்கி வாழ்வதற்கும், ஆண்கள் அவர்களை அடக்கி வைப்ப தற்கும் மிகுந்த வித்தியாசம் உண்டு. ராமகிருஷ்ணர் ஒரு போதும் அவளை அடக்கி வைத்துக் கொடுமை செய்த தில்லை. அவளுக்கு அவர் செலுத்திய மரியாதை எந்தக் கணவரும் காட்டாத ஓர் உயர் பண்பாகும். ராஜராஜேசுவரி யாகவே அன்றோ அவளைப் பூஜித்தார்? அதுவுமன்றி, தமக்கு அபசாரம் செய் தாலும் பாதகமில்லை, அவளுக்குக் கடுகளவும் அபசாரம் செய்துவிடக் கூடாது என்று சீடர்களைக் கண்டித்து வைத்தார். பொதுவாகவே அவளை அழைக்கும்போது அவர், 'துமி' என்று கூப்பிட்ட நாளே கிடையாது. தமிழில், 'நீ', 'நீங்கள்' என்று இரு முன்னிலைப் பதங்களே உள்ளன. வங்காள மொழி யில் இவை 'துமி', 'அபனி' என்ற பதங் களால் குறிப்பிடப் பெறும். 'துமி'க்கும் கீழே 'துயி' என்று ஒன்று உண்டு. நாம் 'அடா', 'அடி' என்று கூறுகிறோமே, அது போன்றது 'துயி'. சாதாரணமாக மனைவியைத் 'துயி' எனச் சொல்லியே அழைப்பர். ராமகிருஷ்ணரோ சாரதை யைத் 'துமி' என்றே சொல்வார். பைத்திய புருஷனை மணந்து சாரதை அவதிப்படுகிறாள் என்று ஊரார் எண் ணிய காலத்தில் அவளோ, ''அகத்துக் காரர் வாய்க்கறதுலே என்னைப்போல் பாக்கியசாலி யாருமே கிடையாது. என் மேலே ஒரு பூவைக்கூட அவர் விட் டெறிந்ததில்லே. ஒரு நாளிலே என்னைத் 'துயி'ன்னு கூப்பிட்டதில்லே'' என்று பெருமைப்பட்டுக் கொண்டாள்.

ஒரு நாள் அவள் அவருக்கு அப்ப மும், சேமியாக் கஞ்சியும் வைத்துவிட்டு அறையிலிருந்து வெளியேறிய போது கதவைச் சாத்திக் கொண்டு வர மறந்து போனாள். அவள் ஒரு சிறு தவறுகூடச் செய்ய மாட்டாள் அல்லவா? எனவே, அவர் லக்ஷ்மிதான் வந்து போகிறாள் என எண்ணி, ''கதவைச் சாத்திண்டு போடி'' என்று கூறினார்.

''சரின்னா'' என்று வெளியிலிருந்து சாரதையின் குரல் கேட்டது.

அவ்வளவுதான்! ஏதோ தகாத பிழை செய்து விட்டாற் போல் ராம

கிருஷ்ணர் பதறிப் போய் விட்டார். வெளியே வந்து, ''ஆஹா, நீ வந்திருக்கேன்னு தெரிஞ்சுக்காமப் போனேனே! லக்ஷ்மின்னு நினைச்சு 'டி' போட்டுட்டேன். நீ இதை மனசுலே வைச்சுக்காதே அம்மா!'' என்று கெஞ்சினார்!

''என்னன்னு, இதைப் போய்ப் பெரிசா நினைச்சுக் கஷ்டப்படறேள்?'' என்று சொல்லிவிட்டு நஹவத்துக்கு விரைந்தாள் சாரதை.

ஆனால் அவர் விஷயத்தை அதோடு விட்டுவிடவில்லை. மறுநாள் அவள் அவரது இருப்பிடம் சென்ற போதும் இதையேதான் பேசினார். ''பிரியே! நேற்று ராத்திரி முழுக்க எனக்குத் தூக்கமே வரல்லே. உன்கிட்டப் போய் இப்படி முரட்டுத்தனமாப் பேசிட்டேனேன்னு நினைச்சு வருத்தப்பட்டுண்டே இருந்தேன்'' என்றார்!

'டீ' போட்டுப் பேசாதது மட்டுமல்ல, யாரிடமும் அவளைப் பற்றிப் பேசும்போது அவளது பெயரை அவர் சொல்லவே மாட்டார். சாதாரணமாக நம் பக்கத்துப் பெண்டிர் (சமீப காலம் வரையில்) கணவர் பெயரைச் சொல்லாமல், தங்கள் குழந்தை பெயரைச் சொல்லி, 'இதன் அப்பா' என்றே சொல்வது வழக்கம். ராமகிருஷ்ணரும் இதே முறைப்படி சாரதையைப் பற்றிச் சொல்லும் போது, 'ஹ்ருதே மாமி' அல்லது 'ராமலால் சித்தி' என்றெல்லாம்தான் சொல்வார்! சாரதையை வெட்கத்தோடு வாழச் சொன்ன அவருக்கும் இப்படிப்பட்ட ஒரு கௌரவமான வெட்கம் இருந்தது!

சாரதை அவரது கால்களைப் பிடித்து விட்டுச் செல்வது வழக்கம். அப்படிப் பதி சுசுருஷை செய்தாலே அவளுக்குத் திருப்தி என்பதால் அவரும் அதை அநுமதித்தார். ஆனால் அவள் தமது காலைப் பிடித்துவிட்டு எழுந்ததும், அவர் தவறாமல் அவளைக் கும்பிடுவார்!

அநேக காரியங்களில் அவளது யோசனையைக் கேட்டு அதன்படியே தான் நடப்பார் அவர். வேதம் விதிக்கும் உத்தம தாம்பத்தியம் நடத்தினார். ''பிரியே, நாம் இருவரும் தோழர்களாவோம்! உன் தோழமையை நான் என்றும் இழக்கமாட்டேன்! நீயும் என் தோழமையை இழக்காதிருப்பாய்! நமது சங்கற்பம் ஒன்றாகவே இருக்கட்டும். ஒருவருக்கொருவர் அன்பையும், ஒளியையும் தந்து கொண்டு, பரஸ்பர நல்லெண்ணத்தோடு, ஒரே உணவை உண்டு, ஒரே போல் சக்தி பெறுவோம். நமது மனங்கள் ஒன்றுபடட்டும். நாம் விரதங்களை ஒன்று சேர்ந்து அநுஷ்டிப்போம். நமது விருப்பங்கள் ஒன்றாகட்டும். நீ இசையாக இருக்கிறாய், நான் சந்தமாக இருக்கிறேன். நீ வானம், நான் பூமி.... நீ சொல், நான் மனம்'' என்றெல்லாம் மணமகளைப் பார்த்து மணமகன் வேத மந்திரம் மொழிகிறான். அந்த மந்திரங்களின் உயிருள்ள உருவகமாக இருந்தது ராமகிருஷ்ணர் சாரதையுடன் நடத்திய இல்லறம்.

சில சமயங்களில் அவளைப் பரீட்சை பார்ப்பதற்கே யோசனை கேட்பது போல் பாவனை செய்வார் அவர். லக்ஷ்மி நாராயணன் என்ற மார்வாரி பக்தருக்கு லக்ஷ்மி கடாக்ஷம் அமோகமாக இருந்தது. அவர் ராமகிருஷ்ணருக்குப் பதினாயிரம் ரூபாய் வழங்க முன் வந்தார். தமக்குப் பண மூட்டை வருகிறது என்று கேட்ட மாத்திரத்தில், ராமகிருஷ்ணரை ரம்பம் கொண்டு அறுப்பது போலிருந்ததாம். பதினாயிரம் ரூபாயைப் பறி கொடுத்தால்கூட யாரும் அப்படிப் பரிதவிக்கமாட்டார்கள். ''அம்மா காளி, இத்தனை காலம் கழித்து இன்னுமா எனக்குச் சோதனை வைக்கிறாய்?'' என்று அலறினார். அலறியவுடனே குறும்புச் சிரிப்பும் சிரித்துக் கொண்டார். காளியின் இன்னோர் உருவான சாரதையைத் தாம் சோதிக்க எண்ணினார். ''அம்மா! லக்ஷ்மி நாராயண் பத்தாயிரம் ரூபாய் தருவேன்னு பிடிவாதம் பண்ணறார். எனக்கு வேண்டாம்னு மறுத்துட்டேன். அப்படியானால் உனக்காவது அதைக் காணிக்கையாகத் தந்தே தீருவேன் என்கிறான். வாஸ்தவமாகவே நீ வாங்கிக்கறதுலே அப்படி ஒண்ணும் தப்பு இல்லே'' என்றார். அவர் வாய் மூடு முன்பே அம்மா படபடத்துக் கூறினாள்: ''அதெப்படித் தப்பு இல்லையாம்? நான் பணம் வாங்கிண்டாலும் உங்களுக்காக, உங்க சிஷ்யாளுக்காகத் தானே செலவழிக்கப் போறேன்? எனக்கு மட்டும் தனியாப் பணம் எதுக்கு? நான் வாங்கிண்டு உங்களுக்காகச் செலவழிச்சா அந்தப் பணத்தை நீங்களே அங்கீகாரம் பண்ணிண்டதாகத்தான் அர்த்தம். பிரபு! இன்னிக்கு இத்தனை மநுஷா உங்க பாதத்திலே வந்து விழறதுக்குக் காரணம் உங்களோட சந்நியாசம்தான். அதுக்குப் பங்கம் ஏற்பட வேண்டாம்.''

ராமகிருஷ்ணர் பெருமைக்கை அடைந்தார். பத்தாயிரம் ரூபாய் கால்காசு போலத் திரஸ்கரிக்கப்பட்டது, அந்த ஏழைத் தம்பதியால். (தொடரும்)

**எ**ழுத்தாளர் ஒவ்வொருவருக்கும் ஒரு தனிப்பட்ட நடை இருப்பதுபோல் ஒவ்வொரு நடிகருக்கும் ஓர் அலாதி மோஸ்தர் உண்டு.

'இதை வேறுவிதமாகவும் நடித்திருக்கலாம். ஆனால் அப்படிச் செய்திருந்தால் இவ்வளவு நன்றாய் இருந்திருக்காது' என்று நினைக்கிறோமல்லவா? காரணம், அந்த மோஸ்தர்தான்! ஒரே வேஷத்தைப் பலர் ஏற்க முடியும், நன்றாகவும் நடிக்க முடியும். ஆனால் நல்ல நடிப்பை அபாரமான நடிப்பாக மாற்றுவது இந்த மோஸ்தர். கடமை உணர்வோடு நடிப்பதைக் காட்டிலும் ஒரு படி உயர்ந்து நின்றால் அந்த நடிப்பு மோஸ்தரால் மெருகேறிய நடிப்பாகும்.

# நல்ல நடிப்பு அபாரமான நடிப்பாக மாறுவது எப்போது?

நல்ல நடிப்பை அபாரமான நடிப்பாக மாற்றுவது மோஸ்தர். அந்த மோஸ்தரைப் பற்றிய ரஸமான விளக்கம்....

லாரன்ஸ் ஒலிவியர் உலகப் புகழ் பெற்ற நடிகர். யூஜின் ஓநெய்ல் அதே அளவுக்குப் பிரசித்திபெற்ற நாடக ஆசிரியர். இவ்விருவரும் இணைந்தபோது ரசிகர்கள் நிலை கொள்ளாமல் தவித்தது இயல்பே அல்லவா? ''இரவுக்குள்ளே நீண்ட பகலின் பயணம்'' என்ற நாடகத்துக்கு, நீண்ட பகல் முழுதும் டிக்கெட் வாங்க மிகப் பெரிய கியூ!

இந்நாடகத்தில் ஒலிவியர் ஒரு காட்சியில் மேஜையின் மீது ஏறிக் கூரையிலுள்ள ஒரு விளக்கைச் சரி செய்கிறார். பின்னர் இறங்குகிறார். இறங்கும் போதுதான் தோன்றுகிறது சிக்கல். மேஜை மீது உட்கார்ந்து கொண்டு நிதானமாக இறங்கலாம். அல்லது அதே காட்சியில் உள்ள உபநடிகர்கள் கைகொடுத்து உதவ, அதனை ஏற்றுக் கொண்டும் இறங்கலாம். ஆனால் ஒலிவியர் நினைத்தார், இந்தக் கதாபாத்திரத்தின் குண இயல்புக்கு இவை பொருத்தமில்லை என்று!

பின்னர் எப்படி இறங்குவது? மேஜை விளிம்பில் ஒரிரு விநாடிகள் சர்க்கஸ்காரரைப்போல் 'பாலன்ஸ்' செய்ய வேண்டும். பிறகு வலது காலைக் கீழே வைத்து இறங்க வேண்டும் — **பின்புறமாக !**

இப்படிச் செய்வதுதான் கதாபாத்திரத்தின் குண இயல்புக்குப் பொருந்தும் என்று ஒலிவியர் எண்ணினார். அவ்வாறே ஒத்திகை பார்த்துச் செய்தார்! இதை நடிகரின் கடமை என்று சொல்ல முடியுமா? அது ஒலிவியரின் மோஸ்தர்; தமது முத்திரையைப் பதிக்கிறார் நாடகத்தில் என்றுதான் கூற வேண்டும்.

**பா**ல் ஸ்கோஃபீல்ட் மற்றொரு பிரபல நடிகர். ''காப்டன் ஆஃப் கோபிநிக்'' என்ற நாடகத்தில் தமக்கென்று ஒரு புதிய குரலையே உருவாக்கிக் கொண்டு நடிக்கிறார் அவர். ஆரம்பம் முதல் இறுதி வரை வார்த்தைகளை உச்சரிப்பதில் முற்றிலும் புதியதான ஒரு பாணியைக் கையாண்டு வெற்றி பெறுகிறார். இது ஒரு மகத்தான சாதனை; இம்மியளவும் பிசகாத திறமை.

இதுபோன்ற முத்திரை பதிக்கும் வேலையை ஷேக்ஸ்பியரின், ''மிட்ஸம்மர் நைட்ஸ் டிரீம்'' என்ற நாடகத்தைத் தயாரித்துள்ள புருக் என்பவரும் செய்கிறார்.

அதில் வரும் வனதேவதைகள் வழக்கம் போல், புஸுபுஸுவென்றிருக்கும் வெள்ளைச் சல்லாத் துணி உடை அணிந்து மங்கலான ஒளியில் இங்குமங்கும் துள்ளித் திரியவில்லை.



மாறாக அரங்கம் ஒளி மயமாக இருக்கிறது. ஓபிரானும் பக்கும் தோன்றுகிறார்கள். சர்க்கஸ் வித்தை செய்கிறவன் சுழன்று வரும் பீங்கான் தட்டுக்களை ஒரு குச்சியில் பிடித்து நிற்க வைத்துக் கொள்வதை நாம் பார்த்திருக்கிறோம். அதைப் போலவே பக்கும் ஓபிரானும் செய்கிறார்கள். ஆனால் சர்க்கஸுக்கும் இதற்கும் ஒரு முக்கிய வித்தியாசம். இவர்கள் ஷேக்ஸ்பியரின் வசனத்தை உணர்ச்சி பூர்வமாகப் பேசி நடித்துக் கொண்டே அநாயாசமாக இந்தச் சர்க்கஸ் வேலையையும் செய்கிறார்கள்! எப்படி புருக்கின் மோஸ்தர்?

நன்றி: 'பரேட்'

**படம்: பால் ஸ்கோஃபீல்ட் (மையம்) 'காப்டன் ஆஃப் கோபிநிக்' என்ற நாடகத்தில்.**







உங்கள் மூளைக்குள் பதின்மூன்றாயிரம் மில்லியன் உயிரணுக்கள் உள்ளன, அதாவது உலகிலுள்ள மக்கள் தொகையின் எண்ணிக்கையைப் போல ஐந்து மடங்கு!

மனித உடல் அன்றாடம் 180 லிட்டர் சிறுநீரை உற்பத்தி செய்கிறது. அடேயப்பா! ஆனால் சிறுநீராக வெளிப்படுவது சுமார் ஒன்றரை லிட்டர்தான்!

உங்களுக்கு நாற்பது வயதாகிவிட்டதா? அப்படியானால் சாளேசுவரக் கண்ணாடி அணிந்து கொள்ள வேண்டும் என்று நான் யோசனை கூறப் போகிறேன் என்றுதானே எதிர்பார்க்கிறீர்கள்? இல்லை. அதை விட முக்கியமான பயனுள்ள யோசனை. ஆண்டுதோறும் உங்கள் இதயத்தைப் பரிசோதனை செய்து கொள்வது நல்லது.

நீங்கள் உறங்கினாலும் சரி, ஓடியாடி வேலை செய்தாலும் சரி, நோயுற்றுப் படுத்திருந்தாலும் சரி, இரவும் பகலும் இடைவிடாது இயங்கி நாள் ஒன்றுக்கு ஒரு லட்சம் லிட்டர் இரத்தத்தை உடலின் பல்வேறு பகுதிகளுக்கும் செலுத்த உதவுவது உங்கள் இதயமே! ஒரு பெரிய பெட்ரோல் டாங்கியை நிரப்பப் போதுமான அளவு இரத்தம்!

சுமார் பத்து ஆண்டுகளுக்கு முன்பு நம் நாட்டில் இதயநோய்கள் காரணமாக உயிரிழந்தோர் தொகை நாற்பது சதவிகிதம். ஆனால் இன்று மருத்துவத் துறையில் நிகழ்ந்துள்ள சாதனைகள், முன்னேற்றம் காரணமாக அம்மரண விகிதம் பதினைந்து சதவிகிதமாகக் குறைந்துள்ளது.

இந்த உண்மைகளையெல்லாம் எந்த மருத்துவர் கூறினார், அல்லது எந்த மருத்துவ நூலில் படித்தறிந்தீர்கள் என்று கேட்கிறீர்களா? சென்னை மருத்துவக் கல்லூரியில் நிகழ்ந்த மகத்தான கண்காட்சிக்குப் போய்த்தான். இம்மாதிரி எத்தனையோ பல உண்மைகளை அறிந்துகொள்ள அது வாய்ப்பளித்தது. உடல் அமைப்பைப் பற்றியும், உடலைப் பீடிக்கும் நூற்றுக்கணக்கான நோய்களைப் பற்றியும், நோய்கள் வருமுன் காக்கும் அரிய வழிமுறைகளைக் குறித்தும் தெரிந்து கொள்ள முடிந்தது. எல்லாம் ஒரே ரூபாய் செலவில்!

மதுவினாலும், புகை பிடிப்பதாலும் விளையும் தீமைகளை விளக்கும் சித்திரங்களையும் எச்சரிக்கைகளையும் பல இடங்களில் பளிச்சென்று காண முடிந்தது. மதுப் புட்டியும் கையுமாக நிற்கும் ஓர் எலும்புக் கூட்டின் அருகே ஒரு சவப் பெட்டியை வைத்திருந்தது ரொம்பப் பொருத்தம்! 'மதுவை நான் அணைத்தேன் — மரணம் என்னை அணைத்தது'.

# மருத்துவக் கல்லூரியில்



இழுக்க இழுக்கத் துன்பம் இறுதி வரை' என்பனபோன்ற வாசகங்கள் மனத்தில் பதியக் கூடியவை. மதுவினால் ஏற்படக்கூடிய பல்வேறு உடல் உபாதைகளை அறியும் பொழுது உண்மையில் பிரமிப்பே ஏற்பட்டது.

'ஒரு மருத்துவன் உருவாகிறான்' என்ற காட்சியினைத் திறம்பட அமைத்திருந்தார்கள். மருத்துவக் கல்லூரியில் அடியெடுத்து வைக்கும் ஒரு மாணவன் ஒவ்வோர் ஆண்டும் பௌதிகம், ரசாயனம், உடற்கூறு சாஸ்திரம், உடல் இயங்கும் இயல், கிருமிகள் விஞ்ஞானம், பொதுமருத்துவம், அறுவைச் சிகிச்சை, மகப்பேறு மருத்துவம், எலும்புமுறிவுச் சிகிச்சை, இதய இயல், நரம்பு இயல், கதிர் வீச்சியல், புற்றுநோய், பல் நோய் என்றெல்லாம் பல்வேறு துறைகளில் படிப்படியாகப் பயிற்சி பெறுவதை விளக்கிய இப்பகுதி குறிப்பிடத் தக்கது. ஒரு மருத்துவன் உருவாக அரசுக்கு ரூ. 80,000 செலவாகிறது என்றும் அறிந்து கொண்டோம். கிராமங்களுக்கும் போர்த்தொழில் புரியும் வீரர்களுக்கும் மருத்துவர்களின் சேவை எவ்வளவு இன்றியமையாதது என்பதையும் குறிப்பிட்டிருந்தார்கள்.

'ஏழைகளுக்குத்தான்' என்பதையும் வற்புறுத்தி வைப்போமே!

மருத்துவத்தின் வரலாறு (History of Medicine ) என்ற பகுதியில் பல்வேறு நோய்களையும் அவற்றுக்கான சிகிச்சைகளையும் சித்திரங்களின் மூலம் விளக்கியிருந்தனர்.

'மயான இசை' கேட்பது பலருக்குப் புதிய அநுபவமாகவே இருந்திருக்கும். இருட்டு அறை; திரை விலகியவுடன் மூன்று மனித எலும்புக் கூடுகளைக் கண்டோம். கிடார், டிரம், வயலின் ஆகிய இசைக் கருவிகளுடன் காட்சியளித்தன அம்மூன்றும்! அருகில் ஒரு கல்லறை; அதன் மீதிலோர் சிலுவைக் குறி. ஒரு மண்டையோடு மேலும் கீழும் போய் வரத் தொடங்குகையில் 'மயான இசை' ஒலித்தது!

இதய அறுவைச் சிகிச்சை (Open heart Surgery) யின் அற்புதமான 'மாடல்' ஒன்று அமைத்திருந்தனர். 'ஆபரேஷன் தியேட்டர்' எப்படி இருக்கும் என்பதைப் பொதுமக்கள் அறிந்து கொள்ள இது உதவியது. ஒரு நோயாளிக்கு மூக்கின் வழியே ஆகாரம் செலுத்தப்பட வேண்டிய நெருக்கடி ஏற்படக்கூடும். அது எவ்வாறு நிகழ்கிறது என்பதையும், இதய நோயினால் பாதிக்கப்பட்ட ஒரு நோயாளிக்கு என்ன சிகிச்சை அளிக்கப்படுகிறது என்பதையும் விளக்கும் காட்சிகள் தத்ரூபமாக அமைந்திருந்தன.

உங்களிடம் உள்ள ஐந்து ரூபாய் அல்லது பத்து ரூபாய் அல்லது நூறு ரூபாய் நோட்டை ரசாயனப் பகுதியில் உள்ள மாணவர் ஒருவரிடம் கொடுத்தால் அதனை உங்கள் கண்ணெதிரில் தீயிட்டு எரித்தார். இதை யாருமே செய்துவிடலாமே என்று கேட்கிறீர்களா? எரித்த பிறகு உங்கள் நோட்டை அப்படியே பத்திரமாகத் திருப்பிக் கொடுத்தாரே — அது உங்களால் முடியுமா? இந்த ரசாயன ரகசியங்களை என்னிடம் கேட்காதீர்கள்!

இதயநோய் திடீரென்று ஒருவருக்கு ஏற்பட்டால் நோயாளியை மருத்துவ மனைக்கு அழைத்துச் செல்வது ஆபத்தானது. வழியிலேயே ஏதாவது விபரீதமாக ஆகிவிடக்கூடும். எனவே இத்தகைய நோயாளிகளை அவர்கள் இருக்கும் இடம் தேடி ஒரு 'நடமாடும்' இதயநோய் ஆஸ்பத்திரி வந்துவிட்டால் நல்லதல்லவா? மேலை நாடுகளில் இந்த வாய்ப்பு நீண்ட காலமாகவே இருந்து வருகிறது. இத்தகைய வாய்ப்பினைச் சென்னையிலும் அளிக்கும்படியாக டி.வி. எஸ்.ஸ்தாபனமும், ரோட்டரி சங்கமும் மூன்று நடமாடும் இதய நோய் மருத்துவ மனைகளை நன்கொடையாக வழங்கியுள்ளனவாம்.

மனித உடலின் எதிரிகள், நண்பர்கள் யார் யார் என்பதனை விளக்க ஓர் ஆரோக்கிய மலையையே அமைத்திருந்தனர். 23 வயதை 17 வயதாகக் காட்ட உதவும் வாசனையுள்ள காலமின் லோஷன் விற்பனைக்குத் தயாராயிருந்தது. கல்லூரி மாணவிகளுக்குப் பயன்படும் என்றோர் அறிவிப்பும் காணப்பட்டது. 23 வயதுள்ள கல்லூரி மாணவியர் மருத்துவக் கல்லூரிக்கு வெளியே எங்கே இருக்கப் போகிறார்கள்! வெள்ளெலிகள், கோழிகள், முயல்கள் இவை மருத்துவத் துறையின் முன்னேற்றத்துக்கு

படங்கள்: (1) இருதய சஸ்திர சிகிச்சையின்போது அதன் வேலையையும் நுரையீரல்களின் வேலையையும் ஏற்கும் இயந்திரங்கள். (2) 'மயான இசை' (3) இளைஞனின் இடது கால் செயற்கை என்பதை அவன் சொன்னால் ஒழிய யாராலும் கண்டுபிடிக்க முடியாது. (4) ஆரோக்கிய மலை.

# மகத்தான கண்காட்சி

எவ்வாறெல்லாம் பயன்படுத்தப் பெறுகின்றனை என்பதை விளக்கிய காட்சி பாராட்டுக்குரியது.

சென்னை பல்கலைக் கழகத் துணைவேந்தர் திரு நெ. து. சுந்தரவடிவேலு அவர்களுடன் இவ்வரிய காட்சிகளைப் பார்த்து முடிக்கையில் காட்சியின் அமைப்பு நிர்வாகி டாக்டர் செந்தில்நாதன் துணை வேந்தரின் அபிப்பிராயத்தைத் தெரிவிக்கும்படி அவரிடம் ஒலிபெருக்கியை நீட்டினார்.

''எத்தனை கோடி இன்பம் வைத்தாய் இறைவா!' என்று பாரதியார் பாடியதைச் சற்றே மாற்றி, 'எத்தனை கோடி ஆற்றல்களை வைத்தாய் இறைவா - இந்தமாணவர்களிடம்' என்றுதான் வியக்கத் தோன்றுகிறது. குறுகிய காலத்தில் எத்தனைப் பெரிய காட்சியினை அமைத்துள்ளார்கள்! தொண்டு செய்யும் வாய்ப்பு இல்லாததாலேயே மாணவர்கள் விரும்பத் தகாத வேறு செயல்களில் சில சமயங்களில் ஈடுபடுகிறார்கள். மருத்துவக் கல்லூரி மாணவர்கள் தங்களுக்கு அளிக்கப் பெற்ற வாய்ப்பினை மிகச் சிறந்த முறையில் பயன்படுத்தியுள்ளனர்'' என்று துணைவேந்தர் பாராட்டியதற்கு மேல் நாம் என்ன கூற விருக்கிறது?

வசூலாகும் தொகை முழுவதையும் பாது காப்பு நிதிக்கே வழங்கினர். 'இலவச அனுமதி' யாருக்குமே இல்லை!

—ரா. பா.

---




## ஸ்ரீமத் கம்பராமாயண அகராதி

(முதல் பாகம் — அ — ஔ)

'பொருள் முக்கியமா? பொருளைக் குறிக்கும் வார்த்தை முக்கியமா?' — என்ற சர்ச்சை நீண்ட நாட்களாகவே உண்டு. 'ரோஜா மலரை எந்தப் பெயரிட்டு அழைத்தால் என்ன? அது அளிக்கும் மணம் மாறிவிடப் போவதில்லை' என்றான், நாடகக் கவிஞன் ஷேக்ஸ்பியர். ஆயினும், 'பொருளுக்கு ஏற்ற சொல் அமைந்தால், அந்தப் பிணைப்பு பார்வதி பரமேசுவரர்கள் போன்றது' என்றான் பாரத நாட்டு மகாகவி காளிதாஸன்! ஆக இரண்டுமே முக்கியந்தான்.

கம்பன் ''துமி'' என்ற சொல்லை உபயோகித்துவிட்டான். அதற்கு விளக்கம் தர சரஸ்வதி தேவியே முன்வந்தாள் என்பதாக ஒரு கதையுண்டு. இதிலிருந்தே கம்பன் சொல்லாட்சியைத் தமிழகம் எப்படி வியந்து பாராட்டியிருக்கிறது என்பதைப் புரிந்து கொள்ளலாம்.

யுத்த காண்டத்தில் ஒரு காட்சி. ராவணன் மந்திராலோசனையில் இருக்கிறான். ராம லக்ஷ்மணர்கள் ஏராளமான வானரப் படையுடன் இலங்கைக்கு வந்துவிட்டார்கள். ராவணன் சற்றுச் சோர்ந்து காணப்படுகிறான். அப்போது மந்திரி மகோதரன் ராவணன் சோர்வைக் கண்டு எள்ளி நகையாடும் முகத்தான் உற்சாகமூட்டுகிறான்:

''ராவணனே, உன் புய வலிமைக்கு ஆற்றமாட்டாது எட்டுத் திக்கு யானைகளும் தோற்றன.

''தேவர்கள் தோற்றனர். முக்கண்கள் படைத்த சிவன் வாழும் கயிலையும் உன் பலத்துக்கு ஈடு கொடுக்க முடியவில்லை.

''ஆனால் இன்று சாதாரண இரண்டு மனிதர்களும் குரங்குகளும் மிகப் பலசாலிகளாகத் தோன்றுகிறார்கள்!

''அடாடா! உன் ஆற்றலை என்னவென்று சொல்ல!''

> திக்கயம் வலியில தேவர் மெல்லியர்
> முக்கணன் கயிலையும் முரணின் றாயது
> மக்களும் குரங்குமே வலிய வாமெனில்
> அக்கட! ராவணற்(கு) அமைந்த தாற்றலே!

மேற்கண்ட பாடலில் 'அக்கட' என்ற சொல்லைக் கம்பன் கையாளுகிறான். கம்பனுக்கு முன் அச்சொல் எந்த இலக்கிய நூலிலும் கையாளப்படவில்லை. மக்களின் அன்றாடப் பேச்சு வழக்கில்தான் இருந்திருக்கிறது. அதனை நாலாவது அடியில் எதுகையாகக் கையாண்டு அச்சொல்லுக்கு ஏற்றமளித்து விட்டான் கம்பன். இப்பாடலைப் படிப்பவர்கள் அந்தச் சொல் கட்டும் வேதனை கலந்த ஏளனத்தை நன்கு உணராமற் போகார்.

இப்படி எத்தனையோ சொற்கள்!

வேறு இலக்கியம் படிக்கும்போது ஒரு நயம் மிக்க சொல் வருமானால், அதனைக் கம்பன் எப்பொருளில் எங்கு எவ்வாறு கையாண்டிருக்கிறான் என்று பார்க்கும் ஆர்வம் எழுவது இயல்பு ஆராய்ச்சி மாணவனுக்கு.

கம்பன் ரஸிகர்களுக்கும் தமிழாராய்ச்சி மாணவர்களுக்கும் பயன் தரத் தக்க இவ்வகராதியின் தொகுப்பாசிரியர் திரு அ. சே. சுந்தரராஜன் அவர்கள். 'அ'விலிருந்து, 'ஔ' வரையிலுள்ள சொற்களைத் தொகுத்து அவற்றின் பொருளையும் அவற்றைக் கம்பன் எந்த எந்தக் காண்டங்களில் எந்த எந்த எண்ணுள்ள செய்யுள்களில் கையாண்டிருக்கிறான் என்பதையும் விளக்கியிருக்கிறார். பல பெரும் புலவர்கள் கூடியிருந்து செய்ய வேண்டிய ஓர் அரும் பணியை இவர் ஒருவரே செய்ய முன் வந்திருப்பதைப் பாராட்ட வேண்டும். இதைத் தொடர்ந்து, இன்னும் மூன்று பாகங்களை விரைவில் அச்சிட்டு வெளியிட வேண்டும் என ஆசிரியர் தமது முகவுரையில் கூறுகிறார். தமிழ் கூறும் நல்லுலகம் அவர் நம்பிக்கை வீண் போக விடாது என்றே எண்ணுகிறோம்.

இடைக்குமிடம்: அ. சே. சுந்தரராஜன் பி.ஏ.; 79, பெருமாள் கோயில் தெரு, பாண்டிச்சேரி; விலை: ரூ. 15-00.

**கல்யாணக் கதைகள் 9**




சோழியிலே ராமாயணப் பிரவசனம் செய்து வந்த சுகப்பிரம்ம சாஸ்திரிகளின் அறிமுகம் சாம்பசிவத்துக்குக் கிடைத்தது.

"உங்க பெண் ஜாதகம் பேஷான ஜாதகம். ரொம்ப உயர்ந்த இடமாகவே உங்களுக்கு அமையும்" என்று அபயம் அளித்தார் அவர். "எழும்பூரிலுள்ள என் நண்பர் ஒருவர் பொழுதுபோக்காக ஜாதகப் பரிவர்த்தனை செய்கிறார். அவர் உங்களுக்குப் பொருத்தமாக ஐந்தாறு இடங்கள் பொறுக்கிக் கொடுப்பார். அதை வாங்கிக் கொள்ளுங்கள். நான் நாளை ராத்திரி செகந்திராபாத்துக்குப் போகிறேன். திரும்பப் பதினைந்து நாட்களாகும். அதற்குள் உங்கள் பெண் கல்யாணம் நிச்சயமாகியிருக்க வேண்டும்" என்று உற்சாகமாகப் பேசினார்.

எழும்பூர் ஆசாமியைச் சாம்பசிவம் சந்தித்தபோது அவருக்கு ரொம்ப நம்பிக்கையாகத்தான் இருந்தது.

ஆறு ஜாதகங்கள் கை மாறின. சாம்பசிவம் ஒரு பத்து ரூபாய் நோட்டை எடுத்து நீட்டிய போது அந்தக் கிழவனார் வாங்க மறுத்துவிட்டார். "இந்த ஜாதகங்களில் ஒன்று உங்களுக்குத் திருப்தியளித்து அந்த இடம் நிச்சயமானால் கல்யாண அழைப்பிதழை ஒரு நல்ல ஜரிகை வேட்டி அங்கவஸ்திரத்துடன் என்னிடம் எடுத்து வாருங்கள். நான் அப்படி ஒரு 'ஸிஸ்டத்'தை அமுல்படுத்திக் கொண்டிருக்கிறேன்" என்று சொல்லி அவருக்கு விடை கொடுத்தார்.

அடுத்த புதன்கிழமை நல்ல நாளாக இருந்தது. காரியாலயத்திலிருந்து வீடு திரும்பிய சாம்பசிவம் எழும்பூரார் கொடுத்த விவரங்கள், விலாசங்களைக் கையில் அடுக்கி வைத்துக் கொண்டார். முதலில் வந்த விலாசம் ஐயனாவரத்தில் இருந்தது. பையனுக்கு ரிசர்வ் பாங்கியில் வேலை. தெரு முனைப் பிள்ளையாருக்கு இரண்டு தேங்காய்களைச் சூறை போட்டுவிட்டு ஐயனாவரம் போகும் பஸ்ஸில் இடம் பிடித்தார்.

தெருவைக் கண்டுபிடிப்பது பிரம்மப் பிரயத்தனமாக இருந்தது. வீட்டைக் கண்டுபிடிப்பது அதிலும் கடினமாக இருந்தது.

ஒண்டுக் குடித்தனம். இரண்டே அறைகள் கொண்ட இடம். சமையற்கட்டுப் பாத்திரங்கள் எல்லாம் பளிச்சென்று வெளியே தெரிந்தன. பக்கத்து அறையில் ஓர் அம்மாள் பரப் பிரும்மமாக ஜன்னல் வழியாக வெளியே பார்த்துக் கொண்டிருந்தாள். 'ஸார்! ஸார்!' என்ற சாம்பசிவத்தின் குரல் கேட்டு அவள் அசையவே இல்லை.

சாம்பசிவம் மீண்டும் குரல் கொடுத்தார். மறுவிநாடி அவர் தலைக்கு மேலிருந்து பதில் வந்தது. ஆம்! மொட்டை மாடியிலிருந்துதான் 'யாரு?' என்ற பதில் வந்தது. அதைத் தொடர்ந்து பக்கவாட்டிலிருந்த குறுகிய படிகள் வழியாகப் பனியன் துண்டு எதும் அணியாத ஓர் ஆசாமி வாயில் சிகரெட் புகைய இறங்கி வந்தார். அந்த மங்கிய வெளிச்சத்திலும் அவர் கையில் குதிரைப் பந்தய வழிகாட்டிப் புத்தகம் இருந்தது நன்றாகத் தெரிந்தது சாம்பசிவத்துக்கு.

அந்தக் கணத்தில் சாம்பசிவத்தின் மனத்தில் ஓர் ஆசை தோன்றியது. 'இந்த வீட்டுப் பையனுக்குக் கல்யாணம் ஆகிவிட்டது என்ற செய்தி வந்தால் ரொம்பத் திருப்தியாக இருக்கும்' என்று நினைத்துக் கொண்டார்.

"ரங்கசாமிங்கிறது...." என்று ஆரம்பித்தார் சாம்பசிவம்.

"ஆமா! ஆமா! நான்தான்! நீங்க யாருன்னு தெரியலியே.....!"

"நான் உங்க பையன் சந்திரன் ஜாதக விஷயமாக வந்தேன்....." மாடியிலிருந்து இறங்கி வந்தவர் பெரிதாகவே சிரித்தார். "போன ஏப்ரல் மாதத்திலேயே என் பையனுக்குக் கல்யாணமாயிடுத்தே! பையனும் நாட்டுப் பெண்ணும் சினிமாவுக்குப் போயிருக்கிறார்கள்! நீங்க யாருன்னு சொல்லல்லியே!"

"பரவாயில்லே....! எனக்குத் தகவல் கொடுத்தவருக்குக் கல்யாணம் ஆயிடுத்துன்னு தெரியாது போலிருக்கு!.... சிரமத்துக்கு மன்னிச்சிடுங்க! நான் வர்றேன்...." சாம்பசிவம் திரும்பிப் பார்க்காமல் நடந்தார். மீண்டும் பஸ் ஸ்டாப்புக்கு வந்த பிறகுதான் அவருக்கு நிம்மதி ஏற்பட்டது. 'ஆண்டவனே! இந்த ரங்கசாமியை எனக்குச் சம்பந்தியாக்காமல் காப்பாற்றினாயே' என்ற மகிழ்ச்சியுடனேயே வீடு திரும்பினார்.

மறு நாள் காலை 'புரோகிராமை' அவர் மயிலாப்பூரில் வைத்துக் கொண்டார். எழும்பூர்க்காரர் பட்டியலில் இரண்டாவது



# அடையாறு வரை

விலாசம். டையன் டெலிபோன் இலாக்காவில உதவி இஞ்சினீயர். பெயர் ராகவன்.

விலாசத்தைக் கண்டுபிடிப்பது சுலப மாகவே இருந்தது. பிரதானமான தெரு. காம்பௌண்டுடன் கூடிய வீடு. காட்டு மல்லிகைக் கொடி அமர்க்களமாய்ப் படர்ந் திருந்தது. வாசல் வராந்தாவில் ஓர் இளைஞன் ஒன்னரை வயதுக் குழந்தைக்குத் தன் கண் இமைகளை மேலே இழுத்துப் பூச்சாண்டி காண்பித்து விளையாடிக் கொண்டிருந்தான்.

வராந்தாவை எட்டிய சாம்பசிவம் ''மிஸ்டர் ராகவன்னு டெலிபோன் இலாகா விலே...'' என்று இழுத்து நிறுத்தினார்.

''ஆமா! நான்தான் ராகவன். உள்ளே வாருங்களேன்! என்ன சமாசாரம்?'' என்று வழி காட்டிக் கொண்டே உள்ளே ஹாலுக்கு அழைத்துக் கொண்டு போனான். குழந்தை யைக் கீழே இறக்கி விட்டுவிட்டு ஒரு நாற்காலி யைக் காண்பித்தான். மிகப் பருமனான மூக்குக் கண்ணாடி மாட்டிக் கொண்டிருந்தான் என்பதைத் தவிர ராகவனிடம் வேறு எந்தக் குறையையும் சாம்பசிவத்தால் காண முடிய வில்லை. நாற்காலியில் உட்கார்ந்த சாம்பசிவம் சுருக்கமாகத் தம்மை அறிமுகப்படுத்திக் கொண்டு தாம் வந்த விஷயத்தைச் சொன் னார். எழும்பூர்க் கிழவரைப் பற்றியும் சொன்னார்.

ராகவன் உடனே பதில் சொல்லவில்லை! உட்பக்கம் பார்த்து, 'லட்சுமி!' என்று குரல் கொடுத்தான். 'தங்கையையோ — அக்காவையோ கூப்பிடுகிறான் போலிருக் கிறது. மற்றவர்களையும் வைத்துக்கொண்டு மேலே பேச விரும்புகிறானோ என்னவோ?' என்று சாம்பசிவம் சிந்திக்க ஆரம்பித்தார்.

ஈரத் தலையை அப்படியே அள்ளிச் செருகிய வாறு ஒரு யுவதி எட்டிப் பார்த்தாள். குழந்தை அவளைப் பார்த்துத் தாவியது.

''லட்சுமி! சார் மிஸ்டர் சாம்பசிவம்! பெண்ணுக்கு வரன் பார்த்துக் கொண்டிருக் கிறார். என் ஜாதகம் வேண்டு மாம். கொடுக்கட்டுமா?'' என் றான் ராகவன் சிரித்துக் கொண்டே.. அந்தப் பெண் ணின் முகம் குங்குமமாகச் சிவந்தது. சாம்பசிவத்துக்கு ஒன்றும் புரியவில்லை.

''சார்! மன்னிச்சுடுங்க! இவள் என் மனைவி லட்சுமி! சும்மா தமாஷ் பண்ணினேன். இது என் குழந்தைதான். மூன்று வருஷங்களாச்சு, எங்கள் கல்யாணம் நடந்து. உங்களுக்கு வீண் அலைச்சல். லட்சுமி!.... சாருக்கு டீ கொண்டு வா....'' என்றான் ராகவன்.

''வேண்டாம்! வேண்டாம்! நான் வருகிறேன். நீங்க எழும் பூர்க்காரர்கிட்டே ஜாதகத் தைக் கொடுத்திருக்கிறீர்கள். கல்யாண விஷயத்தைச் சொல்ல வில்லை போலிருக்கு!'' என்று




சொல்லிக் கொண்டே புறப்பட்டு விட்டார் சாம்பசிவம்.

ஒரு ஜோதை ஜரிகை வேட்டி அங்கவஸ்திரம் எழும்பூராருக்கு நஷ்டம். சாம்பசிவத்துக்கு இரண்டு புதிய அனுபவங்கள் லாபம்!

வீடு வந்த சாம்பசிவம் எழும்பூரார் பட்டிய லைத் தூக்கி ஒரு மூலையில் போட்டார். மனிதர் காலாவதியான லிஸ்டாகக் கொடுத்துவிட் டார் என்ற கோபம். எஞ்சியுள்ள விலாசத் துக்கும் போய்க் கல்யாணம் விமரிசையாக நடந்த விவரத்தை விசாரித்துவிட்டு வீ

கோமதி ஸ்வாமிநாதன்

# புகைப் படங்களில் பழமொழிகள்

## கரணம் தப்பினால் மரணம்!

மேற்படி பழமொழியை விளக்குவதுபோல் ஒரு புகைப்படத்தை எடுத்து அனுப்புங்கள். சிறந்த படத்துக்குப் பரிசு ரூ. 50. முடிவு தேதி: மார்ச் 24ல்.

புகைப்படக் கலை நுணுக்கங்களில் கருத்துச் செலுத்தப்பட வேண்டும். படம் தபால் கார்டு அளவினதாக இருப்பது நலம். பரிசு பெறாவிடினும் பிரசுரமாகும் இதர படங்களுக்கு வழக்கமான சன்மானம் உண்டு. உறையின் மேல் 'புகைப்படப் போட்டி' என்று குறிப்பிடவும். பிரசுரமாகாத புகைப்படத்தைத் திரும்பப் பெற விரும்புவோர் போதிய தபால் தலைகளுடன் கூடிய சுய விலாசமிட்ட உறையை உடன் அனுப்ப வேண்டும். ஆசிரியர் தீர்ப்பே முடிவானது. கடிதப் போக்குவரத்து கிடையாது.

---

அவர் தயாராயில்லை. அடுத்த பத்து நாட்களுக்கு இந்த வரன் வேட்டைக்கு ஓய்வு கொடுத்தார்.

ஒரு நாள் காலையில் எதிர்பாராதவிதமாகச் சுகப் பிரம்ம சாஸ்திரிகளே சாம்பசிவத்தைப் பார்க்க வந்து விட்டார். "என்ன சார்! சௌக்கியமா? நேற்று ராத்திரிதான் ஹைதராபாத்திலிருந்து வந்தேன். நாளை ராத்திரி மதுரைக்குப் புறப்படுகிறேன். ஏதாவது நிச்சயமாயிற்றா?"

"உங்க எழும்பூர் சிநேகிதர்கிட்டே இருக்கிற ஜாதகங்களையெல்லாம் பழைய பேப்பர்காரன்கிட்டே போடச் சொல்லுங்கள். இன்னும் கொஞ்ச நாட்கள் போனால் எல்லாம் பேரன் பேத்தி எடுத்த ஜாதகங்களாகிவிடும்" என்று ஆரம்பித்துத் தம் அயனாவரம் மயிலாப்பூர் அனுபவங்களைச் சொன்னார் சாம்பசிவம்.

"சார்! இப்படி ஏதும் நடக்கும்னுதான் நான் நேரிலே வந்தேன். எல்லாம் நல்லதுக்குத்தான். இப்போ என் கையிலே ஒன்றாம் கிளாஸ் இடம் ஒன்று இருக்கு. பையன் ஜாதகம் பேஷாகப் பொருந்துகிறது. கிளம்பும், இப்போதே போய்ப் பார்த்துவிடலாம். அநேகமாக நாளைக்கே பெண் பார்க்க வரச் சொல்லியும் விடலாம். நான் மதுரைக்குப் புறப்படுவதற்குள் கல்யாணத்தை நிச்சயப்படுத்தியாக வேண்டும்! நான் ஒரு காரியத்திலே இறங்கினால் அதை முடிக்காமல் நடுவில் ஒதுங்கமாட்டேன். எழுந்திருங்கோ!"

"ரொம்பப் பெரிய இடமோ?"

"உமக்கு ஏன் அந்தக் கவலை? மனிதர்கள் தங்கமானவர்கள்."

பெரிய இடத்துக்குத் தம்மால் ஈடு கொடுக்க முடியுமா என்ற அச்சம் இருந்தாலும் சுகப்பிரம்மத்தின் ஆசையைக் கெடுக்க வேண்டாம் என்று தோன்றியது.

காலைப் பத்திரிகையைச் சுகப்பிரம்மத்தின் பக்கம் தள்ளிவிட்டுச் சாம்பசிவம் உடை மாற்றிக் கொள்ள உள்ளே போனார். மனைவியிடம் சொல்லிக்கொண்டு புறப்பட்டார்.

சுகப்பிரம்மம் புறப்படுவதற்குத் தயாராக நின்று கொண்டிருந்தார். ஏதோ விரல் விட்டும் எண்ணிக் கொண்டிருந்தார். "சார்! யோசித்துப் பார்த்தேன். இன்றைக்கும் நாளைக்கும் நாள் சரியாக இல்லை. நான் மதுரைக்குப் போய் வந்தபிறகு அடையாற்றுக்குப் போவோமே? நான் வரட்டுமா?" என்று கிளம்பி விட்டார். அவரை வாசல் வரை வழி அனுப்ப வந்த சாம்பசிவத்தின் கையில் தபால்காரர் ஒரு கடிதத்தைக் கொடுத்துவிட்டுப் போனார்.

மயிலாப்பூர் ராகவன்தான் கடிதம் எழுதியிருந்தான். அன்றைக்குச் சாம்பசிவம் தம் வீட்டுக்கு வந்து போனதிலிருந்து அவர் விஷயமாகவே சிந்தித்துக் கொண்டிருந்தானாம். 'ஏதோ கிண்டல் பண்ணற மாதிரி பேசிட்டேளே பாவம்' என்று அவன் மனைவி வேறு நாலைந்து தரம் சொன்னாளாம். அவனுக்கு வருத்தமாய்ப் போயிற்றாம். அதற்குப் பரிகாரம் பண்ணுவது போல் அந்தக் கடிதம் எழுதுகிறானாம். அவன் இலாக்காவிலேயே அக்கவுண்டெண்டாகப் பணியாற்றும் மூர்த்தி நல்ல குடும்பத்தைச் சேர்ந்த பையன் என்றும் சாம்பசிவம் அவனைக் காரியாலயத்திலேயே வந்து பார்க்கலாம் என்றும் எழுதியிருந்தான்.

அடையாற்றுக்குப் பதிலாக அப்போதே டெலிபோன் இலாக்கா செயல்படும் காரியாலயத்துக்குப் புறப்பட்டார் சாம்பசிவம்.

அடுத்த வாரத்தில் ஒரு நாள் மூர்த்தி பெண் பார்க்க வந்தான். முகூர்த்தமும் அன்றே நிச்சயிக்கப்பட்டது. சாம்பசிவம் குடும்பத்தினருக்குப் பரம திருப்தி. நல்ல பொருத்தம். அடக்கமான பையன்.

திருமணப் பத்திரிகை அச்சாகி வந்தவுடன் சாம்பசிவம் உயர்ந்த ரகத்திலேயே ஜரிகை வேட்டி அங்கவஸ்திரம் வாங்கிக் கொண்டு எழும்பூர் ஆசாமியைப் பார்க்கப் போனார். "சுவாமி! நீர் கொடுத்த ஜாதகம் ஏதும் பயன்கொடுக்கவில்லை. ஆனால் நீர் கொடுத்த விலாசதார் ஒருவர் எனக்கு மாப்பிள்ளை தேடிக் கொடுத்தார். அந்த வகையில் உங்களுக்கு நான் நன்றி செலுத்துகிறேன்" என்றார்.

கடைசி வரையில் சாம்பசிவத்துக்குச் சுகப்பிரம்மம் அன்று அடையாறு போகும் திட்டத்தை ஏன் திடீரென்று கைவிட்டார் என்று தெரியாது. விஷயம் என்னவென்றால் அன்று காலை பத்திரிகையில் அடையாறு பெரிய மனிதர் தமது மகன் திருமணத்துக்கு வந்திருந்தோர், வாழ்த்து அனுப்பியோர் ஆகிய அனைவருக்கும் நன்றி அறிவிப்பு விளம்பரம் கொடுத்திருந்தார். அதைச் சுகப்பிரம்மம் பார்த்து விட்டார்!

(சம்பவங்கள் உண்மை;
பெயர்கள் மட்டும் மாற்றப்பட்டுள்ளன)

# புதிய லேவெண்டர் அற்புதம்

ஒய்யாரம்.
நீங்காத
நறுமணம்.

## லக்மே லேவெண்டர் ப்யூடி டால்க்




லக்மே லேவெண்டர் ப்யூடி டால்க் கனிய புஷ்பத்தின் நறுமணம். அதைத் தூவிக் கொண்டால், நறுமணப் பொய்கையில் நீராடியது போன்றிருக்கும்! அத்தனை மனம் கவரும் மணம் கமழும்! அதிமென்மையானது; அதி மென்மையானது; புதுமலர்ச்சி பூப்பது. ஒவ்வொரு நாளும் லக்மே லேவெண்டர் ப்யூடி டால்க் தூவி, இன்பத்தில் திளைப்பீர். அந்த அற்புதமான அனுபவம் பெறுவீர்...இன்றும்... என்றும்!



லக்மே டால்க் ஐந்து வகை நறுமணங்களில் உங்களை அடைகிறது: லேவெண்டர், வெட்டிவேர், கிர்வான், சந்தனம் மற்றும் ட்ப்ளோரல் மிக்ஸ்



திரு நரசிம்மன்



திரு வி. வி. குமார்

இல்லத்தரசிகளின் சந்திப்பு

இவ்வாரம் உரையாடலில் பங்கு கொள்வோர்:

**ஸ்ரீமதி ஜானகி நரசிம்மன்**
**ஸ்ரீமதி லட்சுமி குமார்**




(மயிலாப்பூர் டிசில்வா சாலையில் உள்ள பிரபல கிரிக்கெட் பந்து வீச்சாளர் திரு குமாரின் இல்லம்.

வரவேற்பறையில் அமர்ந்து ஏதோ புத்தகம் படித்துக் கொண்டிருந்த குமார், காலடிச் சத்தம் கேட்டுத் திரும்பினார். அந்த விநாடி குமாரின் முகத்தில் மாறுதல். முகமலர்ச்சியுடன் அவசரமாக எழுந்தார்.

"வாருங்கள், வாருங்கள்" என வெகு வினயமாகவும் அன்புடனும் வரவேற்றார்.

வந்திருந்தவர்கள்: சர் எம். சிடி. முத்தையா செட்டியார் ஹைஸ்கூல் தலைமை ஆசிரியரும், அவர் மனைவியும், அவர்கள் மகளும்.

பேச்சுக் குரலைக் கேட்டு ஸ்ரீமதி லட்சுமி குமாரும் அங்கே பிரசன்னமானார். 'வாங்கும்' என்று பவ்யமாக ஸ்ரீமதி ஜானகியை வரவேற்று அமரச் செய்தார்.)

ஸ்ரீமதி ஜானகி நரசிம்மன்: இன்று ஞாயிற்றுக்கிழமையாச்சே; வாரத்தில் ஒரு நாள் தான் இப்படி வீட்டை விட்டுப் புறப்பட முடிகிறது; பார்க்க வேண்டியவர்களைக் காணவும் முடிகிறது.

ஸ்ரீமதி லட்சுமி குமார்: உங்க பாடு தேவலாம். வாரத்தில் ஒரு நாளாவது கணவர் வீட்டோடு இருப்பார் என்ற நம்பிக்கையோடு இருக்கலாம். இங்கே அப்படியில்லை. இன்றைக்கும் பாருங்கள், இவர் காலையில் காப்பி சாப்பிட்டுவிட்டுப் போனவர், அஸ்தமித்துத் தான் வீடு திரும்பினார். லயோலா கல்லூரியில் இந்தியன் ஓவர்ஸீஸ் பாங்க் கிரிக்கெட் குழுவுடன் விளையாடிவிட்டு, கொஞ்ச நேரம் முன்புதான் வந்தார்.

ஜானகி: உங்கள் வீட்டுக்காரர் அடையாறு ஸ்டேட் பாங்க் ஏஜண்டாக இருப்பவராயிற்றே! ஸ்டேட் பாங்க் கட்சியில் ஆடித்தானே ஆக வேண்டும்? விவேகாநந்தா காலேஜில் படிக்கும்போதே சக்கைப் போடாகக் கிரிக்கெட் ஆடியவராயிற்றே குமார்! இவர்கூடப் பள்ளிக்கூடத்தில் நன்றாக விளையாடும் மாணவர்களை ரொம்ப உற்சாகப்படுத்தி விடுவார்.

லட்சுமி: அவர் ஊக்கமளிப்பதற்கு ஏற்றமாதிரி மாணவர்கள் நல்லபடியாக நடந்து கொள்கிறார்களா? மாணவர்கள் பண்ணும் ஆர்ப்பாட்டங்கள் பற்றிப் பத்திரிகைகளில் நிறைய அடிபடுகிறதே!

ஜானகி: பத்திரிகைகளில் ஒரு தரப்புச் செய்திதான் வரும். மரியாதையுடன் குரு பக்தியுடன் நடந்து கொள்கிறவர்களைப் பற்றி எங்கே போடப் போகிறார்கள்? 'பொதுவாக மாணவர்கள் ரொம்பவும் அடக்கமாகத்தான் நடந்து கொள்கிறார்கள்' என்று அடிக்கடி வீட்டில் சொல்லுவார். சில பிள்ளைகளுக்கு விளையாட்டில் ரொம்ப அக்கறை இருக்கும். சில பிள்ளைகள் படிப்பிலேயேதான் குறியாக இருப்பார்கள். இரண்டிலுமே நல்ல பெயர் எடுக்கும் பிள்ளைகளும் உண்டு.

லட்சுமி: எப்போதாவது மாணவரை அடிக்க வேண்டிய சந்தர்ப்பம் நேர்ந்திருக்கிறதா அவருக்கு? மாணவர்களை அடிப்பது சரி என்று கருதுகிறாரா? அல்லது நல்ல வார்த்தை சொல்லித் திருத்தப் பார்ப்பாரா?

ஜானகி: பெரும்பாலும் நல்ல வார்த்தை சொல்லியோ, கோபித்துக் கொண்டோ பிற சிறிய தண்டனைகள் அளித்தோ தான் திருத்தப் பார்ப்பார். ஆனால் பள்ளிக்கூடத்தின் நற்பெயருக்கே அகௌரவம் ஏற்படும் வகையில் சிலர் அத்துமீறி நடந்து கொண்டால் அப்போது மட்டும் தண்டப் பிரயோகமும் உண்டு!

உங்கள் கணவர் மாணவராக இருந்தபோது கிரிக்கெட் பந்தயங்களுக்குப் போனதைப் பற்றிக் கல்யாணமானபின் சொல்லி இருப்பாரே!

லட்சுமி: திருமணமான புதிதில் நான் கேட்பேன். சில இனிய நினைவுகளையும் சொல்லியிருக்கிறார். சில சோகமான சம்பவங்களையும் சொல்லியிருக்கிறார். விளையாட்டில் வெற்றி – தோல்விகள் சகஜம்தானே! வெற்றி வந்தால் அதிகம் சந்தோஷப்படக் கூடாது. தோல்விக்காகக் கலங்கவும் கூடாது. சமநிலை தவறக் கூடாது. சில சமயம் அம்பயர் தவறு செய்துவிடுவார். அப்போதும் பொறுமை இழக்கக் கூடாது. இல்லாதபோனால் பொல்லாப் பெயர் சூழ்ந்துவிடும்... ஹெட்மாஸ்டரின் மனைவியாயிற்றே! உங்களுக்குத் தெரியாதா பொறுமையின் அவசியம்?

ஜானகி: இவர் பொறுமைக்குச் சோதனை ஏற்படும் காலம் வருஷாந்திர விடுமுறை முடிந்து, பள்ளிக்கூடம் திறக்கும்போதுதான். அட்மிஷன் பிரச்னை இருக்கிறதே, அப்பப்பா! ரொம்பச் சிரமம்! அப்போதும் இவர் பொறுமையே உருவாகக் காட்சி தருவதாய்ச் சில நண்பர்கள் அந்தச் சமயத்தில் அவரைப் பார்த்துவிட்டு வந்து சொல்லுவார்கள். எப்படித்தான் அவ்வளவு பொறுமையுடன் இருக்கிறீர்களோ என்று நான்கூட இவரைக் கேட்பதுண்டு. ''பிள்ளைகளை அழைத்துக் கொண்டு எதிர்காலம் பற்றிய நம்பிக்கையை முகத்திலே தேக்கிக் கொண்டு வருகிறார்கள். அவர்களிடம் கொஞ்சம்கூட முகம் கோணாமல் பதில் சொல்ல வேண்டும். அவர்கள் ஏமாற்றம், அடைய நேர்ந்தாலும் அவர்கள் மனம் புண்படும்படியாக எதுவும் நடந்துவிடக் கூடாது. பள்ளிக்கூடத்துக்கு நல்ல பெயர் சம்பாதித்துத் தரவேண்டியவர்கள் ஆசிரியர்கள்தானே?'' என்பார்.

ஏன், பாங்கி ஏஜண்டாக இருக்கும் உங்கள் வீட்டுக்காரரும் அப்படித்தான், வாடிக்கையாளர்களிடம் பாங்குக்கு நல்ல பெயர் சம்பாதித்துத் தரவேண்டும் என்ற லட்சியத்தோடுதானே செயல்படுவார்?

லட்சுமி: அதிலென்ன சந்தேகம்? அவர் கிரிக்கெட்டை ஸீரியஸாக எடுத்துக்கொண்டு விட்டதால் உத்தியோகத்தை விளையாட்டாக நினைத்துவிட முடியாதே! இரண்டுக்கும் சம அளவு முக்கியத்துவம் தருகிறார்!... ஆசிரியர்களுக்கான ஜனாதிபதி விருதை ஹெட்மாஸ்டர் ஸார் வாங்கியிருக்கிறார் இல்லையா?

ஜானகி: ஆமாம். அப்போது ஜனாதிபதியாயிருந்த டாக்டர் ராதாகிருஷ்ணனிடம் விருது வாங்கியிருக்கிறார்.

உங்கள் பெண்ணுடைய நடன அரங்கேற்றம் சமீபத்தில் நடந்ததே. ரொம்ப நன்றாயிருந்தது. முக்கியமாக அதைச் சொல்லிவிட்டுப் போகத்தான் வந்தோம். பத்திரிகைகளிலும் பார்த்தேன். விமர்சனங்களில் பாராட்டியிருந்ததைப் படிக்க ரொம்ப சந்தோஷமாயிருந்தது.

லட்சுமி: ஆமாம், அநுராதாவுடன் எங்கள் நெருங்கிய உறவினர் ஒருவரின் பெண் சுபாஷிணியும் சேர்ந்து ஆடினாள். உங்கள் பெண் என்ன செய்கிறாள் இப்போது? படிக்கிறாளா?

ஜானகி: என் பெண்கள் இருவருமே ஆசிரியைப் பயிற்சி பெற்றுப் படித்து வருகிறார்கள்.

லட்சுமி: அடடே! அப்பாவைப் பின்பற்றுகிறார்களா இவர்கள்? பேஷ்! எல்லாத் துறைகளிலும் இருப்பது போல் கல்வித் துறையிலும் எத்தனையோ மாறுதல்கள் முன்னேற்றங்கள் இப்போது...

ஜானகி: உண்மைதான். இவரும் மாறி வரும் சூழலுக்கு ஏற்பப் புதிய உத்திகளைக் கையாள்கிறார். போன வாரம் கூட அப்படி ஒரு நிகழ்ச்சி நடந்தது, எம். ஸிடி. பள்ளிக்கூடத்தில். ஆயிரம் மாணவர்கள் வரையில் பங்கு கொண்டார்கள்.

லட்சுமி: என்ன அது? விவரமாகச் சொல்லுங்கள்.

ஜானகி: பொது அறிவை வளர்க்க ஒரு போட்டி வைத்தார். ஒவ்வொரு வகுப்புக்கும் ஏற்றமாதிரி 'க்விஸ்'. அதில் அதிகம் மார்க் வாங்கிய பிள்ளைகளுக்குப் பரிசு! கல்வித் துறைக்குப் பணம் செலவிடுவதில் ஆர்வம் காட்டும் பெரிய மனிதர் ஒருவர் மூலம் பரிசுகளை நன்கொடையாகப் பெற்று, மாணவர்களுக்கு அளித்தார். இந்த வருஷம் ஆரம்பமாகிவிட்டதல்லவா? இனி ஒவ்வொரு ஆண்டும் இந்தப் போட்டி நடக்காவிட்டால் மாணவர்கள் விடமாட்டார்கள் போலிருக்கிறது! அத்தனை உற்சாகம் பிள்ளைகளிடம். குமார் ஹாட்ரிக்கைச் சாதித்தால் எப்படிக் குதூகலமடைவார்களோ அப்படி சந்தோஷப்பட்டார்கள், போங்களேன்!

லட்சுமி (சிரித்தபடி): இவருடைய ஒருசில சாதனைகள் தீவிர கிரிக்கெட் ரசிகர்களுக்கு நன்றாக அத்துபடியானவைதாம். அப்படி நினைவில் இருக்கும்படியான காரியம் எதையாவது உங்கள் கணவரின் மாணவர் ஒருவர் செய்ததுண்டா?

ஜானகி: என் கணவரிடம் படித்த மாணவர்களில் ஒருவர். 'ஆத்ரேயா' என்று பெயர். அந்தப் பிள்ளை பூகோள பாடம் நடந்தபோது, ஆஸ்திரேலியாவைப் பற்றி ரொம்ப நன்றாக வர்ணித்திருந்தானாம். ''ஏண்டா! ஆஸ்திரேலியாவுக்குப் போய் வந்தவன் மாதிரி பிரமாதமாக எழுதியிருக்கிறாய்! உனக்கு நல்ல பூகோள அறிவு... பின்னால் வாய்ப்பு இருந்தால் ஆஸ்திரேலியாவுக்குப் போய் வா...'' என்று அவனைத் தட்டிக் கொடுத்தாராம்.

சில வருஷங்களுக்கு முன்னால் அந்த மாணவன் ஆஸ்திரேலியாவுக்குப் போய்த் திரும்பினான். நேரே இவரிடம் வந்து ''பாடத்தில் எழுதியதையெல்லாம் நேரிலும் பார்த்துவிட்டேன்''. என்றான்.

லட்சுமி: ஹெட்மாஸ்டர் ஸாருக்கு இதயம் குளிர்ந்து போயிருக்குமே! ஒவ்வொரு உபாத்தியாயரும் எதிர்பார்ப்பது இது போன்ற பெருமையைத்தானே!

(''நாழியாகிறதே, கிளம்புவோமா?'' என்று குரல் கொடுத்தார், அதுவரை குமாருடன் பேசிக் கொண்டிருந்த ஸ்ரீ நரசிம்மன்.)

லட்சுமி: எங்கள் வீடு தேடி நீங்கள் வந்தது எங்களுக்குப் பெரிய கௌரவம். போய் வாருங்கள்.

(குமாரின் அன்னை வெற்றிலை, பாக்கு, மஞ்சள் குங்குமம் கொடுக்க, நரசிம்மன் தம்பதி தங்கள் மகளுடன் வீட்டுக்குப் புறப்பட்டனர்.)

(உரையாடல் தொகுப்பு: ஏ. சுவாமிநாதன்)

# புதிய பார்லே மாரி பிஸ்கெட்டுடன்
## காப்பியின் சுவையை அனுபவிப்பீர்




க்ளுகோ, மொனகோ
மற்றும் சுவைமிக்க இதர
பிஸ்கெட்டுகளின்
தயாரிப்பாளர்களான பார்லே
உங்களுக்கென பிரத்யேகமாக
வழங்குகின்றனர்—
காப்பியின் சுவைக்குச் சுவையூட்டும்—

**பார்லே**
**மாரி**
பிஸ்கெட்டுகள்

**அருமையான ருசியுள்ளவை-ஃபாயில்-ஸீல்டு பேக்குகளில்**

everest/10600/PP tam

முப்பது வருடங்களுக்கு முன் கேளுவுக்கு வயது பதினெட்டு. அவனை இன்று காலையில் எதிர்பாரா வண்ணம் சந்தித்தேன். அவன் கோழிக்கோட்டில், அதுவும் அவனுடைய பழைய 'வடக்கே பறம்பு' வீட்டில் இன்னும் இருப்பான் என்று நான் எதிர்பார்க்கவேயில்லை.



பெருமழையின் இரைச்சலில் கண் விழித்த நான், சங்கரன் குட்டி ஆவி பறக்கும் காப்பியுடன் வந்து நின்றபோது, ''மணி என்ன?'' என்று கேட்டேன். ஆறு அல்லது ஆறரை இருக்கும் என்பது என் உத்தேசம்.

''எட்டரை ஆவி ஸாமி!'' என்றான்.

எனக்குத் தூக்கிவாரிப் போட்டது. பதினொரு மணிக்கு மினாகு கமிட்டி கூட்டம். நான் தலைவன். கூட்டத்துக்குத் தேவையான சில காகிதங்களையும் ஃபைல்களையும் ஒரு தடவை படித்தாக வேண்டும். நேற்று இரவே, 'நாளைக்கு மாங்காவு குளத்தில் குளித்து விட்டுச் சிவன் கோயிலுக்குப் போய் வர வேண்டும்' என்று தீர்மானித்திருந்தேன். இப்போது மணி எட்டரை என்றால், அரை மணி நேரத்தில் குளியலையும் தரிசனத்தையும் முடித்துக் கொள்ள வேண்டும்.

ஒரு மாதிரியாக மாங்காவு குளத்தில் குளித்த பின் அவசரம் அவசரமாகத் தலையைத் துடைத்துக் கொண்டு, ஈர வேஷ்டியுடன் சிவன் கோயிலினுள் நுழைந்தேன்.

அங்கே நடையில் ஆள் அரவமே இல்லை. ஒருவர் மட்டும் கண்ணை மூடிக்கொண்டு நின்று கொண்டிருந்தார். உள் பிராகாரத்தை பிரதட்சணம் செய்து விட்டு, தலைக்கு மேலே தொங்கிய மணியையும் ஒரு தடவை அடித்து விட்டுத் தரிசனம் செய்தேன். பூசாரி மெதுவாக வந்தார். ஒரு வில்வ இலையையும், ஒரு

சிட்டிகை விபூதியையும் என் கையில் தூக்கி எறிந்தார். பெற்றுக் கொண்டு மீண்டும் கர்ப்பக்கிரகத்தினுள் பார்வையைச் செலுத்தினேன். என் பார்வைக்குக் குறுக்கே இருந்த ஒருவர் — இப்போது கண்ணைத் திறந்துவிட்டார்—நடந்தார். எனக்குப் பதிலொரு மணி சமிட்டிக் கூட்டம் நினைவுக்கு வந்தது. இனி மேல் ஸ்வாமி என் மனத்தில் ஒட்ட மாட்டார் என்ற உணர்வும் பிறந்தது.

கோயிலுக்கு வெளியே வந்தபோதுதான் அவரும் என்னைத் தொடர்ந்து வந்திருக்கிறார் என்று தெரிந்தது. ஒரு நிமிடம் நின்று பார்த்தேன். அவரும் நின்று என்னைப் பார்த்தார். அவர் பார்த்தார்; நான் பார்த்தேன். திடீரென்று அவர், ''நிங்ஙள் ராமகிருஷ்ணன் அல்லே? நடு ஸேரி மடம்... ஸாமோரின் கோளேஜில் ரெண்டு கொல்லம் படிச்சில்லே?'' என்று கேட்டார்.

''யெஸ்... ஜூ ஆர் கேளு ஏராடி!''

அடுத்த நிமிஷம் கேளு என்னைக் கட்டிக் கொண்டு, ''வரின், வரின்... என்டே வீடு அதே வீடு தன்னேயா...வரின்...சாயா கழிக்கான்... கண்டு எத்தற கொல்லமாயி!'' என்றான். மழையை விட வேகமாக வார்த்தைகள் பொழிந்தன.

''முப்பது வருஷங்களாச்சு!'' என்ற நான், ''கேளு, நீ நான் இருக்கிற இடத்துக்கு வா. நடுசேரி மடம் கிட்டத்தான்...'' என்றேன்.

''நோ மிஸ்டர்... நிங்ஙள் என்டே மடத்துக்காண இப்போ வராம் போகுந்நது...''

சரி ஒரு கால் மணி நேரம் எதிர்பாராமல் போகிறது என்று நான் அவனுடன் சென்றேன்.

பழைய சின்னஞ் சிறு வீடு இருந்த இடத்தில் இப்போது பச்சை நிற வீடு, சிறிதாக ஆனால் கண்ணுக்குக் கவர்ச்சியாக இருந்தது. சுற்றிலும் தென்னை, பலா, மா, வாழை என்று மரங்கள் மண்டிக் கிடந்தன. படியேறியதும் திண்ணைச் சுவரில் பஞ்சாப் பெயர் பலகை. பித்தளைப் பலகையில் உள் மரத்தின் கறுப்பு, மேஜர் கே. கே. கேளு ஏராடி என்ற பெயரை வடித்துக் கொடுத்தது.



''ஜோ, யூ வேர் இன் தி ஆர்மி?''

''யெஸ், யெஸ்... ஐ வாஸ் இன் தி ஆர்மி. கம் இன்...''

ஹாலில் தரை எங்கும் சிவப்புக் கம்பளம். சுவரில் போட்டோக்கள். குருவாயூரப்பன் படத்திலிருந்து ராணுவப் படங்கள் வரை. ஒரு சோபாவில் உட்கார்ந்து கொண்டேன்.

''மாது, மாது!'' என்று கேளு கத்தினான். பிறகு, ''மாது என்னுடைய வீட்டு வேலைக்காரன். சின்னப் பையன். ஆனா நன்னா வேலை செய்வான்'' என்றான்.

''நீ தமிழ்கூட நன்னாப் பேசுகிறாயே?'' என்றேன்.

''மெட்ராஸிலே ஆறு வருஷம் இருந்திருக்கிறேன். செயின்ட் தாமஸ் மவுண்டில் இருந்தேன்.....''

நான் மேலே பேசுவதற்குள் மாது வந்தான்.

''மாது, ரெண்டு சாயா, கொறைஞ்ச உப்பேரி, ரெண்டு புழுங்கிய பழம்.''

''ஆகட்டும், மேஜர்.''

''வேகத்திலே வரணும்.''

அடுத்த கணம் மாது குடையுடன் ஓடினான்.

''எங்கே போறான்?''

''நான் சொன்னதை யெல்லாம் கொண்டு வர.''

''அப்போ உன் வீட்டிலே யாருமில்லையா? எங்கேயிருந்து இதெல்லாம் வரப்போகிறது?''

''நான் இன்னும் பிரம்மச்சாரி. என் கதைதான் தெரியுமே?''

''தெரியும். இப்போ அவள் எங்கே இருக்கிறாள்?''

''பக்கத்தில்தான்.'' சொல்லிவிட்டுக் கேளு ஒரு தரம் கண்ணை மூடிக் கொண்டான்.

என் மனக் கண் முன் குஞ்சுமதி தோன்றினாள். இப்போது நான் என் கண்களை மூடிக் கொண்டேன். மேஜர் என்னுடைய சிந்தனையைக் கலைக்க முற்படவில்லை.

இதே கோழிக்கோட்டில் முப்பது வருடங்களுக்கு முன்னால் ஸாமோரின் கல்லூரியில் ஒரு பெரும் பரபரப்பு உண்டாயிற்று. கல்லூரியில் ஒரு பெண்ணையும் ஒரு பிள்ளையையும் திடீரென்று காணோம். அவர்கள் இருவரையும் கோழிக்கோடு ரயில்வே ஸ்டேஷனில் ஒன்றாகப் பார்த்ததாகத் தகவல் காலை பத்தரை மணிக்குக் கிடைத்தது. ஒரு கார் ரயிலைத் துரத்தி ஓட, இன்னொரு கார் குருவாயூர்ப் பக்கம் விரைந்தது.

ஒரு சாதாரண தையற்காரரின் பிள்ளை துணிச்சலுடன் ஒரு லட்சாதிபதியின் பெண்ணைக் கடத்திக் கொண்டு போய்விட்டான் என்ற பேச்சுத்தான் ஊர் முழுதும் கேட்டது. ஒருவர்கூட, பெண்ணுக்கும் சுமாரான வயது ஆகிவிட்டது, அவள் தன்னுடைய பூரண சம்மதத்துடன்தான் அந்தப் பிள்ளையுடன் சென்றிருக்கிறாள் என்று கூறவில்லை. ஏனெனில் அப்படிச் சொல்ல யாருக்கும் தைரியம் வரவில்லை. ஸ்ரீகுமார மேனன் முனிசிபல் சேர்மன், அமெரிக்காவுக்கு மிளகும் ஏலக்காயும் ஏற்றுமதி செய்கிறவர். வீட்டில் மூன்று கார்கள். அதுவும் பிரும்மாண்டமான கார்கள். நடக்காவில் பெரிய பங்களா. அந்த ஸ்ரீகுமார மேனனின் பெண், குஞ்சுமதியைக் கேவலம் ஒரு தையற்காரனின் பிள்ளை இழுத்துக் கொண்டு போவதாவது?

குத்திப்புறத்தில் இறங்கி, நதியைக் கடந்து பஸ் ஏறிக் குருவாயூர் சென்றாக வேண்டும். ரயிலைத் துரத்திச் சென்ற கார் ஷோரனூரை அடைந்திருக்கும். ஆனால் குருவாயூரை நோக்கிப் பறந்த வண்டி, நதிக்கரையில் காத்திருந்தது. குஞ்சுமதியை வாரி இழுத்து வண்டியில் போட்டார்கள். கேளுவை ஒரு தென்னை மரத்தில் கட்டி, தலைகால் தெரியாமல் அடித்தார்கள். கரியும் உடம்பில் உப்பு நீரையும் கொட்டினார்கள்.

அதன் பின் குஞ்சுமதியை யாரும் கல்லூரியில் பார்க்கவில்லை. கேளு மட்டும் தலை நிமிர்ந்து வரலானான். அவனுடைய தைரியத்தையும், சாகஸத்தையும் கண்டு, சக மாணவர்கள் கொண்டாடினார்கள். ஓரிரு துணிச்சல்காரப் பெண்கள் அவனை அணுகித் தங்களுடைய காதலை வெளியிட்டார்கள். ஒருசில நாட்களுக்குக் குஞ்சுமதி எங்கே இருக்கிறாள், என்ன செய்கிறாள் என்றே யாருக்கும் தெரியவில்லை. அதன் பின்தான் மெள்ள மெள்ளச் செய்திகள் கிடைக்கலாயின. ஏழெட்டு நாட்கள் ஜுரத்தில் பிதற்றிய அவளை, சென்னைக்கு அனுப்பி விட்டார்கள் என்றும், அங்கே அவள் போலீஸ் உதவி கமிஷனராக இருக்கும் மாமா வீட்டில் இருந்து கொண்டு பெண்கள் கல்லூரியில் படிக்கப் போகிறாள் என்றும் தெரிய வந்தன. கேளு, உடனேயே சென்னைக்கு ஓடுவான், குஞ்சுமதியைச் சந்திக்கத் துடிப்பான் என்றுதான் யாவரும் எதிர்பார்த்தார்கள்.

ஆனால் கேளு ஓடவில்லை. இப்படிப்பட்ட ஒரு சம்பவம் நடந்ததாகவும் அவன் வெளியே காட்டிக் கொள்ளவில்லை.

எனக்குக் குஞ்சுமதி – கேளு காதல் கதை முழுக்க முழுக்கத் தெரியும். கேளுவும் நானும் மாங்காவு என்கிற பகுதியில் வசித்து வந்ததால் தினந்தோறும் ஒன்றாகவே போவோம், வருவோம். இதுமட்டுமல்லாமல், நாங்கள் இரண்டு பேரும் கல்லூரி கால்பந்தாட்டக் கோஷ்டியில் இருந்தோம். அவன் எங்கே கால்பந்து ஆடினாலும் குஞ்சுமதியை அங்கே பார்க்கலாம்.

ஒரு நாள் கேளு, ''நானும் குஞ்சுமதியும் ரொம்பப் பழக ஆரம்பிச்சுட்டோம்'' என்றான்.

''பணக்காரப் பெண்! நீ அவள் கைக்கு வேடிக்கை காட்டற பொம்மையாகி விடுவாய்!''

''நீ ஒரு முட்டாள்... எங்கள் காதல் தெய்விகமானது!''

''அப்போ கல்யாணம் செய்துகொள்... எந்த அசுரன் குறுக்கே நிற்கிறான்?''

''விஷயம் தெரிஞ்சா இந்தக் கோழிக்கோடே குறுக்கே நிற்கும்.''

''அப்போ இரண்டாம் பேருக்குத் தெரியாமல் குருவாயூரில் பண்ணிக்கொள்.''

''அவளுக்கு வயசு இன்னும் பதினெட்டு ஆகவில்லை.''

''அப்போ காத்திரு.''

''அதற்குள்ளே அவளை வேறு யாருக்காவது கல்யாணம் செய்து கொடுத்து விடுவார்களே!...''

# ராக்ஃபோர்ட் பொருளாதார அமைப்பை வலுப்படுத்துகிறது



நமது கிராமங்களில் பொருளாதாரப் புரட்சி நிகழ்ந்துவருகிறது. நீர்ப்பாசன அமைப்புக்களின் பயனாக மேலும் செழுமையான பயிர்கள் நாட்டுப்புறங்கள் முழுவதிலும் புதுச் செல்வத்தைப் பரப்பிவருகின்றன. மண் குடிசைகள் இருந்த இடங்களில் செங்கல் கட்டடங்கள் தோன்றிவருகின்றன. நமது விவசாயச் செல்வத்தைப் பத்திரமாகப் போற்றிக்காக்க அங்கங்கே கிடங்குகள் தோன்றிவருகின்றன.

இந்த முன்னேற்றப் பாதையின் ஒவ்வொரு அடியிலும், பொருளாதாரத்திற்குத் திண்மையையும், வலுவையும் தந்து, புரட்சிக்குப் புத்தூக்கம் அளிக்கிறது ராக்ஃபோர்ட்.





## ராக்ஃபோர்ட்

டால்மியா சிமெண்ட்







டால்மியா சிமெண்ட் (பாரத்) லிட்.,
பதிவுபெற்ற அலுவலகம் மற்றும் ஆலைகள்:
டால்மியாபுரம், தமிழ் நாடு.
தலைமை அலுவலகம்: சித்திரா ஹவுஸ், புது டெல்லி-1.
ஏகபோக விற்பனை ஏஜெண்டுகள்:
சிமெண்ட் டிஸ்ட்ரிப்யூட்டர்ஸ் லிட்.,
டால்மியாபுரம், தமிழ் நாடு

''அதற்குக் குஞ்சுமதி சம்மதிப்பாளா? அப்படிச் சம்மதித்தால் அவள் உன் காதலுக்கு அருகதை இல்லாதவள்...''

''அவள் கேவலம் பெண்தானேடா!''

''நீ பெண்ணைத்தானே காதலிக்கிறாய்?''

''இப்போ என்ன வழி?''

''கல்யாணம்!''

''இல்லாவிட்டால்...?''

''பிரும்மச்சாரியாக இரு... அவள் கல்யாணம் பண்ணிக் கொண்டு ரெண்டு வருஷத்துக்கு ஒரு குழந்தைன்னு பெத்துத் தள்ளறதை வேடிக்கை பார்த்துக் கொண்டிரு...''

இந்தப் பேச்சு நடந்து ஆறு மாதங்கள் ஓடிவிட்டன. காதல் சந்திப்புகள் தொடர்ந்து நடந்தனவே தவிர, தற்கொலைகள் ஏதும் நிகழவில்லை. ஒரு தடவை ஸ்ரீகுமார மேனன் தையற்காரரைப் பார்க்க மாங்காவுக்கு வந்தார், நடு ராத்திரியில் ரகசியமாக. மறுநாள் கேரு என் வீட்டுக்கு ஓடி வந்தான். அவனுடைய தகப்பனுக்கு இரண்டாயிரம் பணத்தைக் கொடுத்துக் கோயம்புத்தூரில் தையல் தொழில நடத்த ஸ்ரீகுமார மேனன் உத்தரவிட்டிருக்கிறாராம். ஒரு வாரத்தில் கேளுவின் அப்பா கோயம்புத்தூருக்குப் போனார். ஆனால் கேளு பிடிவாதமாகக் கோழிக்கோடிலேயே இருந்தான். இறுதிப் பரீட்சைக்கு இன்னும் ஒன்பது மாதங்கள் இருந்தன. கல்லூரிப் பணம் இல்லாமல் கொஞ்ச நாட்கள் தவித்தான். எப்படியோ பலர் உதவி செய்யவே, அவனுடைய படிப்பு தொடர்ந்தது. ஸ்ரீகுமார மேனனின் திட்டம் பலிக்கவில்லை.

அவர் இன்னொரு திட்டத்தைத் தீட்டிச் செயலாக்குவதற்குள் அவனும் குஞ்சுமதியும் குருவாயூருக்கு ஓடிவிடத் தீர்மானித்து அதைச் செயலிலும் காட்டிவிட்டார்கள். அதுவும் தோல்வியில் முடிந்தது.

அப்புறம் நான் குஞ்சுமதியைப் பார்க்கவில்லை. அவள் எங்கே இருக்கிறாள், என்ன செய்கிறாள், யார் கணவனாக வாய்த்தான், எத்தனை குழந்தைகளை அவள் பெற்றுத் தள்ளினாள் என்கிற விவரங்களும் தெரியாது.

இப்போது கேளுவைப் பார்த்தாகிவிட்டது. அவனிடம் கேட்டால் எல்லாம் தெரியும்.

மாது நேந்திரம்பழம், வறுவல், 'ம- கொண்டு வந்து, மடப்பாயின்மேல் வைத்தான்.

''டாக்டர் ஏதேனும் பறைஞ்சுவோ?''

''அரை மணியில் இவ்விடே வராம்னு பறைஞ்சு.''

''யாருக்கு என்ன உடம்பு?''

கேளு சிரித்தான்.

''டாக்டர் என்னுடைய பழைய நண்பர்!''

பழத்தை விண்டு வாயில் போட்டுக்கொண்டேன். ''கேளு, நீ ஏன் இன்னும் கல்யாணம் செய்து கொள்ளவில்லை?'' என்று கேட்டேன்.

''வேளை வரவில்லை.''

''இன்னும் அந்தக் குஞ்சுமதியை நினைச்சுண்டு புலம்பிக்கொண்டிருக்கிறாயா?''

''இப்போ புலம்பறதில்லை.''

''அப்போ பண்ணிக் கொண்டிருக்கலாமே? உனக்கு இப்போ நாற்பத்தெட்டு வயசுதான் ஆறது. ஆறு பார்த்தா நாற்பதுகூட மதிக்க மாட்டா... மீசை நரைக்கவேயில்லை...''




''டை தடவிண்டிருக்கேன்'' என்றான் கேளு.

''அப்படியே டை தடவிண்டிருந்தாலும் பரவாயில்லை.''

''ஸ்ரீகுமார மேனனுக்கு இப்போதான் ஹார்ட் அட்டாக் வந்திருக்கு. படுத்த படுக்கையா இருக்கார். அவர் கண்ணை மூடினால் தான் எங்க சபதம் நிறைவேறும்!''

''என்ன உளர்றே? என்ன சபதம்?''

''நீ அந்தத் துன்னக்காரன் பிள்ளையைக் கல்யாணம் பண்ணிண்டா, அன்னிக்கே நான் விஷத்தைக் குடிச்சுச் செத்துப் போயிடுவேன்னு ஸ்ரீகுமாரமேனன் குஞ்சுமதிகிட்டே சத்தியம் பண்ணியிருக்கான்... அதுவும் எங்கேன்னு நினைக்கிறே? குருவாயூரப்பன் சந்நிதியில். குஞ்சுமதியின் அம்மா ரொம்பப் பயந்து போயிட்டா. அதே சந்நிதியில் பெண்கிட்டேயிருந்து சத்தியம் வாங்கியிருக்கா, அப்பா இருக்கிற மட்டும் கல்யாணம் பண்ணிக்கொள்கிறதில்லை என்று.''

''அடப் பாவமே... இந்தமாதிரி சத்தியங்களுக்குக் குருவாயூர் சந்நிதிதானா கிடைச்சுது?''

''இல்லாவிட்டா சத்தியம் நிறைவேறாது!'' என்றான் கேளு.

''சரி, உங்க சபதம் என்ன? கல்யாணம் பண்ணிண்டு மேனனைச் சாகடிப்பதா?''

''இல்லை. ...அன்னிக்கு நடந்தமாதிரி அதே கார்த்தாலே பத்து மணி பாசஞ்சரில் மூன்றாம் கிளாஸ் டிக்கட் வாங்கிக்கொண்டு குத்திப்புரத்தில் இறங்கி, நதியைக் கடந்து குருவாயூருக்குப் போய்க் கல்யாணம் பண்ணிக் கொள்றதுன்னு!''

''அப்போ குஞ்சுமதிக்கும் இன்னும் கல்யாணம் ஆகலையா?''

''இல்லே!''

''இப்போ குத்திப்புரத்தில் பிரிட்ஜ் வந்துவிட்டது. எப்படி நதியைக் கடக்கப் போகிறாய்? தோணியிலா?''

''ஆமாம்! உனக்கு எங்க காதல் இன்னும் விளையாட்டாகவே இருக்கு. இல்லையா?''

''எனக்குக் காதலில் நம்பிக்கையே இல்லை. ஐ.ஏ.எஸ்.ஸை எப்படியோ பாஸ் பண்ணினேன். இந்த மூன்று எழுத்துக்காக ஒரு பணக்காரன் தன் ஒரே பெண்ணை அறுபதாயிரம் செலவழிச்சு என் தலையில் கட்டினான். நானும் ஏற்றுக் கொண்டேன்...''

''குஞ்சுமதியும் ஒரே பெண்!''

''நீ ஐ. ஏ. எஸ். இல்லியே.''

''நான் ஐ. ஏ. எஸ்.ஸாக இருந்தாலும் தரமாட்டான். ஏன் தெரியுமா? நான் ஒரு டெய்லருடைய பிள்ளை!''

''சரி, நீயும் நானும் எங்கேயோ போய்க் கொண்டிருக்கிறோம். நான் கிளம்பறேன்.

பதினொரு மணிக்குக் கமிட்டிக் கூட்டம் இருக்கு.''

''இன்னும் பத்து நிமிஷம் இரு...''

''சரியா பத்து மணிக்குக் கிளம்பிவிடுவேன்'' என்ற நான் ''இண்டர்மீடியட்டுக்குப் பிறகு என்ன செய்தே?'' என்று கேட்டேன்.

''கோயம்புத்தூரில் பி. ஏ. படிச்சேன். ஜெயில் ரோடில் என் அப்பா பெரிய நையல் காரராகிவிட்டார்.''

''அதுக்கு மூலதனம் கொடுத்தது ஸ்ரீகுமார மேனன்தானே! அதுதான் வர தட்சணையோ?''

''அப்புறம் கமிஷண்ட் ஆபீஸர் பதவி கிடைச்சது. மீரட், அம்பாலா, மெட்ராஸ் பார்த்துவிட்டு அறுநூறு ரூபாய் பென்ஷனோடு திரும்பினேன். இப்போ மூணு வருஷமாறது...''

''சமைச்சுப் போட ஓர் ஆளை வைச்சுக்கக் கூடாது?''

''சமைச்ச சாதமே இங்கே வர்றபோது, நான் எதுக்குத் தனியா சமைக்கணும்?''

''எங்கே இருந்து? இப்போ வந்ததே டாக்டர் வீட்டிலிருந்து. அங்கே இருந்தா?''

''ஆமாம்.''

அவன் சொல்லி முடிக்கவும், வாசலில் கார் சத்தம் கேட்கவும் சரியாக இருந்தது.

''டாக்டர் ஹாஸ் கம்'' என்றான் கேணு.

காரிலிருந்து இறங்கிய டாக்டர் சின்னஞ்சிறு குடையை விரித்து, மெதுவாக நடந்து வந்தாள். புடைவைக் கரையில் நீர் படாமலிருக்க, ஒரு கையால் புடவையைச் சிறிதே தூக்கிப் பிடித்துக் கொண்டாள்.

அவள் படியேறி வந்தாள். அதிக உயரமில்லை. உயரம் அவளுடைய உடற் பருமனில் ஒளிந்து விட்டது என்று நினைத்தேன். தலை தும்பைப் பூவாக வெளுத்திருந்தது. முகத்தில் தங்கப் பிரேம் போட்ட கண்ணாடி. நெற்றியில் குங்குமம். வயதின் முதிர்ச்சியில், ஒரு காலத்தில் இருந்த பொன்னிறம் மங்கிப் போய்ச் கருங்கிக் கிடந்தது.

''மேஜர் அம்பலம் போய் மடங்கியோ?''

''ஊலே...''

நான் பார்த்தேன். அவளுடைய பருமனை என் மனம் ஏற்றுக் கொள்ளவில்லை. குறைந்தது ஆறு குழந்தைகளையாவது அவள் பெற்றிருக்க வேண்டும் போல இருந்தது. அதே சமயத்தில் அவளை எங்கேயோ பார்த்த நினைவும் பிறந்தது.

''மிஸ்டர் ராமகிருஷ்ணனை நிங்ஙளு கண்டிட்டு உண்டோ?'' மேஜர் கேணு கேட்டான்.

அவள் என்னைக் கூர்ந்து பார்த்தாள். கண்ணாடியில் சிதறியிருந்த மழை நீர்த் துளிகளைத் துடைத்த பின்னும் ஒரு தடவை பார்த்தாள்.

''ஓர்மை இல்லா...'' என்ற அவள், என்னைப் பார்த்து, ''ஐ ஆம் டாக்டர் குஞ்சுமதி!'' என்றாள்.

எனக்கு மூர்ச்சை வரும் போலிருந்தது...

கேணு சிரித்தான். ''குஞ்சு! இவர் நம்மோட கிளாஸ்மெட் ராமகிருஷ்ணன். இப்போ வலிய ஆபீஸரான ஐ. ஏ. எஸ்.''

''ஏது ராமகிருஷ்ணன்! நடுசேரி மடம் பொன்னுக்குட்டியின்டே பிள்ளேயோ?''

''அதே.... ஆ ராமகிருஷ்ணன் தன்னேயா!''

''அப்போ ஸ்டூடண்டா இருக்கும்போள் ஒரு வால்ஸ எ வெரி லீன் பாய்... இப்போ எந்தா, இங்ஙனே தடிச்சுப் போய்!''

என்னை அவள் குண்டு என்கிறாள்! நான் குண்டுதான். ஐ. ஏ. எஸ். நல்ல ஊட்டம். கவலையில்லாத மனம். குண்டாகிவிட்டேன்! ஆனால் இவள் எப்படி இப்படிப் பருத்து வீங்கலாம்? இந்த உணர்ச்சிகளை யெல்லாம், உள்ளடக்கிக்கொண்டு, ''உங்க ரெண்டு பேரையும் முப்பது வருஷங்களுக்கு அப்புறம் சந்திக்கிறதில் ரொம்ப சந்தோஷம். உங்க அப்பாவுக்கு ஹார்ட் அட்டாக் வந்ததாமே... இப்போ எப்படி இருக்கு?'' என்றேன்.

''ஒவ்விலே இருக்கார். பயமில்லே... அவர் பத்து வருஷங்கள் வாழ்வார்!'' என்றாள்.

''கேணு!''

''என்ன?''

''கேட்டாயா! இன்னும் பத்து வருஷமாம். அப்போ எனக்கு வயது ஐம்பத்தெட்டு!''

''எனக்கும் அதே வயசுதான்!'' என்றாள் குஞ்சுமதி.

''பதினெட்டிலே நடந்ததோ என்னமோ, அறுபதிலே கண்டிப்பாக நடக்கும் கேணு!'' என்றேன்.

''நாங்க அதைப்பற்றிக் கவலைப்படல்லே. நாங்க சந்தோஷமா இருக்கோம்!'' என்றாள் குஞ்சுமதி.

கேணு சிரிக்க, நானும் சிரித்தேன்!

---



வேலைநிறுத்தம் செய்து கொண்டிருக்கும் தொழிலாளர்களின் தலைவர் பேசிக் கொண்டிருக்கும் பொது கூட்டத்தில் கத்தினார்கள்:

''நீங்கள் ஆயிரம் ரூபாய் 'மானேஜ்மெண்ட்' டிடமிருந்து லஞ்சம் வாங்கியிருக்கிறீர்கள்.''

''நிரூபிக்க முடியுமா?'' என்றார் தலைவர்.

''முடியும்'' என்றனர் கூட்டத்தினர்.

தலைவர் சொன்னார்: கொஞ்சம் இருங்கள், என் மனைவியை அழைத்து வருகிறேன். நான் சொன்னால் நம்ப மறுக்கிறாள். ''உங்கள் சாமர்த்தியம் எனக்குத் தெரியாதா?'' என்கிறாள்!

''ஒரு மாசமாக வேலைநிறுத்தம் நடந்து கொண்டிருக்கிறது. நேற்று தான் சம்பளம் வாங்கினேன்.''

''வேலை நிறுத்தமென்றால் சம்பளம் எப்படிக் கிடைத்தது?''

''நான் அந்த ஆபீசில் வேலை செய்யவில்லை. ஒழிக! கோஷம் போட்டதற்காகச் சம்பளம் கொடுத்தார்கள்!''

- கே. வி. எம்.

**சிரிக்கிற வேலையை நிறுத்த வேண்டாம்!**



# "'ஜாக்கிரதையாகக் கையாளவும்' என்று எழுதட்டுமா?"

"அவசியமில்லை. ஸதர்ன் ரோட்வேஸில்தானே அனுப்பப் போகிறோம்?"

பிரதி வருடமும் பல லட்சம் டன் எடையுள்ள பார்ஸல்களை ஸதர்ன் ரோட்வேஸ் சுமந்து சென்று சேர்க்கிறது. பார்ஸல்களை அது ஜாக்கிரதையாகக் கையாள்கிறது. ஒவ்வொருவரையும் தனி அக்கறையுடன் கவனித்து சேவை செய்கிறது. இதனாலெல்லாம்தான் அதனிடம் வாடிக்கையாளர்களுக்கு நம்பிக்கை ஏற்பட்டிருக்கிறது. பார்ஸல்களை ஏற்றுவது, எடுத்துச் செல்வது, இறக்குவது அனைத்தையும் விசேஷப் பயிற்சி பெற்ற ஊழியர்களே செய்கிறார்கள்.

ஆகவே உங்கள் பார்ஸல்களை ஸதர்ன் ரோட்வேஸ் நல்லபடியாகவும் பத்திரமாகவும் கொண்டுபோய்ச் சேர்ப்பதில் வியப்பில்லை.

வாடிக்கையாளர்களிடை வளர்ந்து வரும் நல்லெண்ணமும் நம்பிக்கையும்தான் தென்னகம் பூராவையும் தன் பார்ஸல் ஸர்வீஸினால் ஸதர்ன் ரோட்வேஸ் அரவணைக்கத் துணை புரிந்துள்ளது. தங்கள் பண்டங்களை அனுப்புவதற்கு மேன் மேலும் அதிக மக்கள் ஸதர்ன் ரோட்வேஸைப் பயன்படுத்திக் கொள்கிறார்கள்.






**ஸதர்ன் ரோட்வேஸ் பிரைவேட் லிமிடெட்**

டிவிஎஸ் தொகுப்பைச் சேர்ந்த நிறுவனங்களில் ஒன்று

மதுரை

இன்னுமோரு குழந்தையைப் பெறுவதற்குமுன் சற்று

# யோசியுங்கள்

முதலில் இந்தக்
குழந்தையை நன்றாக
வளர்க்க வேண்டாமா?

இக்குழந்தையை நன்றாக படிக்க வைக்க வேண்டாமா? உங்கள் விருப்பப்படி, குழந்தைக்கு வசதிகள் அனைத்தும் அளிக்க வேண்டாமா? இன்னொரு குழந்தையை உடனே பெற்றால், இதெல்லாம் முடியுமா? சிரமம் தான். அடுத்த குழந்தை உடனே வேண்டாம் என்று நீங்கள் கருதுவது இயற்கைதானே.

நீங்கள் மட்டுமல்ல; உலகெங்கிலும் தம்பதிகள் இவ்விதம்தான் கருதுகிறார்கள். வளமுடன் வளர்க்க வசதிகள் பெருகும் வரை, அவர்கள் இன்னொரு குழந்தையைப் பெறுவதில்லை. நீங்களும் 'நிரோத்' உபயோகித்து குழந்தை பெறுவதைத் தள்ளிப்போடலாம். அனைவரும் விரும்பி ஏற்கும் ரப்பர் கருத்தடைச் சாதனம் நிரோத்; இது ஆண்களுக்கானது. தலைமுறை தலைமுறையாக உபயோகத்தில் இருந்துவரும் சிறந்த, எளிய, பாதுகாப்பான கருத்தடைச் சாதனம் நிரோத். நீங்களும் நிரோத் உபயோகியுங்கள்.

**நிரோத் எங்கும் கிடைக்கிறது. அரசாங்க ஆதரவு விலை 15 பைசாவுக்கு 3**




இன்னொரு குழந்தையை வளர்க்க வசதி பெறும் வரை
உபயோகியுங்கள்

# நிரோத்



லட்சக்கணக்கான பேர் விரும்பி ஏற்கும் எளிய, பாதுகாப்பான
கருத்தடைச் சாதனம் நிரோத்.

davp 71/460

பலசரக்குக் கடைகள், மருந்தகங்கள், வெற்றிலைபாக்குக்கடைகள் இங்கெல்லாம் நிரோத் விற்பனையாகிறது

ஒரு தடவை வாயு பகவான், 'தாம் புகாத இடமில்லை' என்று கர்வப்பட்டார். அவர் கர்வத்தை அடக்குவதற்காகக் கடவுள், ''அப்பா! உன்னைப் புகவிடாத இடமும் பூவுலகில் உண்டு. உனக்கு 144 போடுவார்கள்!'' என்றார்.

''அப்படியா?'' என்று வியந்தார் வாயு பகவான்.

''சென்னை நகரசபை இண்டோர் ஸ்டேடியத்தில் டிக்கெட்டில்லாமல் நுழைந்து பார், தெரியும்!'' என்றார் கடவுள்.

வாயு பகவான் அட்டகாசமாகச் சென்னை இண்டோர் ஸ்டேடியத்துக்குள் வர முயற்சி செய்தார். அத்தனை கதவுகளும் அடைக்கப் பட்டிருந்தன. 'எக்ஸாஸ்ட்' ஃபான்களும் சுழலவில்லை. மின்சார விசிறிகளும் அசையவில்லை. ஷட்டில்காக் ரசிகர்கள் ஐந்து மணி நேரம் காற்றுப் புக வசதியில்லாவிட்டாலும் அந்த ஆட்டத்தில் இருந்த சுவாரசியம் காரணமாகக் கரகோஷ ஆரவாரம் செய்து மகிழ்ச்சியில் ஆழ்ந்திருந்தார்கள்.

சென்னை நகரசபை ஸ்டேடியத்தில் தமிழக கவர்னர் ஷா பிப்ரவரி பதினேழாம் தேதி ஷட்டில்காக் இருபத்தேழாவது சகல ராஜ்யங்கள் போட்டியையும் முப்பத்தாறு




வது தேசியப் போட்டியையும் தொடங்கி வைத்தார். சகல ராஜ்யங்களின் செமி பைனல் போட்டிகள் ஆரம்பமாயின. தேசிய சாம்பியன்களான சுரேஷ் கோயலும் திப்பு கோஷும் இரட்டையர் ஆட்டத்தில் மேற்கு வங்காள குழுவினரோடு ஆடி ஜயித்தார்கள்.

உடனே 'ஜன கணமண' ஒலித்தது. அது முடிந்ததும் வீட்டுக்குக் கிளம்பினேன்!

'' 'ஜனகணமன' கவர்னர் போவதற்காக! இனிமேல் தான் நல்ல மாட்சுகள் இருக்கின்றன!'' என்று நிர்வாகிகளுள் ஒருவர் சொன்னார். மறுபடியும் உட்கார்ந்தேன்!

பிப்ரவரி 17, 18 தேதிகளில் நடைபெற்ற சகல ராஜ்யங்கள் போட்டியில் இறுதி ஆட்டத்தில் ரயில்வே கோஷ்டி வென்றது. திப்புகோஷும் சுரேஷ் கோயலும் இரட்டையர் விருதைப் பெற்றனர். மகாராஷ்டிர ஆட்டக்காரி மிஸ் ஷோபா மூர்த்தி பெண்கள் போட்டியில் கேரள ஆட்டக்காரி மிஸ் பிலிப்பை வென்று புகழ் பெற்றார்.

ஷோபாமூர்த்தி பம்பாய் செயிண்ட் ஸேவியர் கல்லூரியில் நூலக விஞ்ஞானத்தில் பி. ஏ. பட்டதாரி! நான்கு வருஷங்களாக இண்டர் யுனிவர்ஸிட்டி சாம்பியன்! இவர் மகாராஷ்டிர ஆட்டக்காரி மெளரீன் மத்தியாஸோடு சேர்ந்து ஆடி வெற்றிக்கொடி நாட்டினார். நகாக ஆட்டத்திலும் 'டிபென்ஸ்' ஆட்டத்திலும் 'டிராப்' ஷாட்டிலும் ஷோபா மூர்த்தி தேர்ந்து, ரசிகர்களைப் பல தடவை கைதட்டி மகிழ வைத்தாள்! ஷோபா மூர்த்தி இந்த ஆட்டத்தில் முதல் தடவையாகத் தேசிய வீராங்கனைப் பட்டம் பெறுகிற பட்டதாரி!

'பழைமைக்குப் பயணச் சீட்டு, புதுமைக்கு நுழைவுச் சீட்டு' என்பது ஷட்டில்காக் புதுமொழி.

'ஷட்டில்காக்கில் இரட்டையர்' சகோதரர்கள் திப்புகோஷும் ரோமன்கோஷும். செமி பைனலில் ரோமன் கோஷும் மைசூர் பிரகாஷும் மோதினார்கள். இந்தப் பந்தயங்களில் ஷட்டில்காக் பந்துக்கு வாய் உண்டானால் அழுதிருக்கும். ரசிகர்களுக்குக் கைதட்டி முடியவில்லை. ஆளுக்கு ஒரு 'கேம்' ஆனபொழுது விளக்குகளும் 'ஸ்டிரைக்' செய்து பார்த்தன. மூன்றாவது ஆட்



டத்தை ரோமன் கோஷிடமிருந்து பிரகாஷ் அற்புதமாக ஆடி எடுத்ததும் மைசூர் ஆட்டக்காரர்கள் பிரகாஷைத் தலையில் தூக்கி வைத்துக் கொண்டாடினார்கள்.

அஹுஜா — பிரகாஷ் இறுதியாட்டம் ரசிகர்களை அப்படியே சிலையாக்கி வைத்தது. 17 — 17 — இரண்டு பேருக்கும் வெற்றி பெற ஒரே பாயிண்டு! ஒரே பாயிண்டில் தேசிய சாம்பியன் பட்டம் இந்த இரு இளைஞர்கள் பக்கமும் ஊசலாடியது. கடைசியில் அயராத ஆட்டக்காரர் மைசூர் பிரகாஷுக்கே தேசிய சாம்பியன் பதவி கிட்டியது. பிறகு அவருக்கே ஜூனியர் சாம்பியன் பதவியும். ஷட்டில் காக் வானில் பிரகாஷ் புதிய நட்சத்திரம்.

இந்த ஷட்டில்காக் தேசியப் போட்டிகளினால் தேசப் பாதுகாப்பு நிதிக்கு வரும்படி 10,001!

சென்னை தபால் தந்தி இலாகா ஆதரவில் நடந்தன இப்போட்டிகள். —குண்டுமணி

படங்கள்: 1. திப்புகோஷ். 2. தேசிய வீராங்கனை ஷோபா மூர்த்தி. 3. மெளரீன் மத்தியாஸ். 4. சுரேஷ் கோயல். 5. தேசிய சாம்பியன் பிரகாஷ். 6. அஹுஜா.




இராஜாஜி அவர்களின் மரக் கறி உணவு (கல்கி 20-2-72) பற்றிய கருத்து மக்கள் மனத்தில் ஆழமாகப் பதிய வேண்டிய ஒன்று.

கொல்லாமை, புலால் உண்ணாமை, பிராணிகளின்பால் இரக்கம் இவற்றை மக்களிடை வலியுறுத்துவதை முக்கிய குறிக்கோள்களாகக் கொண்டு 'பிராணிகளுக்கான கிறிஸ்து சங்கம்' ('The Christ Society for Animals') இயங்குகிறது.

சமூகத்தில் ஒரு கணிசமான பகுதி பைபிளை வழிகாட்டியாகக் கொண்டுள்ளது. அவர்களைத் தவிர எண்ணற்றோர் பலராலும், பிராணிகள் உணவுக்காகவும் மற்றக் காரணங்களுக்காகவும் கொல்லப்படுகின்றன என்பது உண்மை. எனினும் அவர்களாலும் அவர்களுக்காகவும் பிராணிகள் கொல்லப்படுகின்றன என்பதும் மறுக்க முடியாதது.

பைபிளைப் பின்பற்றுவோர் அத்தகைய கொலைச் செயல்களிலிருந்து விலகியிருந்தால் அந்த அளவுக்கு உயிர் வதை குறையும் என்பது மட்டுமல்லாமல் மற்றவர்களுக்கு அது ஓர் எடுத்துக்காட்டாகவும் அமைந்து உயிர் வதை தவிர்க்கப்படும்.

பைபிளுக்கும், கொல்லாமை மற்றும் புலால் மறுத்தல் இவற்றிற்கும் தொடர்பேதும் இல்லை என்ற எண்ணம் மக்களிடையே சாதாரணமாக நிலவி வருகிறது. ஆயின் இக்கருத்து தவறு.

பைபிள் கொல்லாமையையும், புலால் மறுத்தலையும் புறக்கணிக்கும்படி கூறவில்லை என்பதையும் மாறாக அவற்றைத் தன்னைப் பின்பற்றுவோரிடம் மிகவும் எதிர்பார்க்கிறது என்ற உண்மையையும் மக்கள் மனத்தில் பதிய வைக்க வேண்டியது தற்போது உருவாகி வரும் சூழ்நிலையில் மிகவும் அவசியமாகிறது.

சென்னை—5 டி. ஆர். ஜேம்ஸ்
21—2—72 காரியதரிசி, பிராணிகளுக்கான கிறிஸ்து சங்கம்.

தி. சா. ராஜு தாம் எழுதிய 'தனி வழி'யில் வாழ்க்கையில் நிகழும் சாமான்ய விஷயங்களையும் உன்னதமான காரியங்களையும் கலை உணர்வோடு இசைத்துத் தருகிறார். ஆயினும் அவர் நேருஜியின் இறுதி விருப்பம் பற்றிக் கூறியிருப்பது மட்டும் சரியல்ல. தமது சாம்பல் கங்கையில் கலக்கப்பட வேண்டும் என்ற தமது ஆசைக்கு மதம் சம்பந்தப்பட்ட காரணம் ஏதுமில்லை என்று நேருஜியே தெளிவுபடுத்தியிருக்கிறார். சிறு குழந்தையாக இருந்தது முதல் கங்கை நதி தீரத்தைப் பார்த்துப் பார்த்து ஓர் ஈடுபாடு அதனிடம் ஏற்பட்டது என்று சொல்லியிருக்கிறார்.

கூனூர்,
25—2—72 டேவிட் ஜெரோம்

சென்ற 15-2-72 அன்று அம்பை ஸ்டேட் பாங்குக்கு டிராப்ட் எடுக்கச் சென்றிருந்தேன். நேரம் பகல் பன்னிரண்டு மணி இருக்கும். அரியலூரில் ஸ்டேட் பாங்க் இருப்பதால் ஸ்டேட் பாங்க் டிராப்ட் எடுத்து அனுப்ப வசதியாக இருக்கும் என்று சென்றபோது அங்குள்ள காஷியர்கள் மின்சாரம் தடைப்பட்டமையால் வேலை செய்யாது வெளியேறினர். வெளிச்சம் இல்லாமை காரணமாக இருந்தால் வேறு விளக்கு உபயோகித் திருக்கலாம். மின்விசிறி இல்லாமையால் வேலை பார்க்க முடியாது என்று எழுந்து சென்றிருக்கின்றனர். சுமார் ஒன்றரை மணி காத்திருந்து, பின் டிராப்ட் எடுக்க முடியாது திரும்பினேன். மறுநாள் திருநெல்வேலி ஸ்டேட்பாங்கில் டிராப்ட் எடுத்தேன்.

இம்மாதிரி அனுவசிய கால தாமதம் அங்குள்ள யூனியன் ஆட்களால் ஏற்படுகிறது. இதனால் மக்கள் படும் கஷ்டம் அரசுக்குத் தெரியுமா?

சேரன்மகாதேவி
21—2—72 சிவசங்கரன்

சென்னை - 34
25 - 2 - 72

உயர்திரு ராஜாஜி அவர்களுக்கு,

''இடம் கொடுத்தால் கெட்டுப் போவீர்கள்'' என்று தலைப்பிட்டுத் தங்கள் பொற் கையெழுத்திட்டு 'இளைஞர்களே! மதுக்கடை கிட்டப் போகாதீர்கள்' என்று 20-2-72 கல்கி இதழில் எழுதியிருப்பதைப் பத்து தரமாவது படித்திருப்பேன். கண்களில் நீர் வந்தது. நானும் இளைஞன்தான். தனிப்பட்ட முறையில் ஒரு விஷயம் எழுதுகிறேன். அமெரிக்காவில் படிக்கும்போது, ஒரு பேராசிரியர் வீட்டில் விருந்தில் பலதேச மாணவர்களிடையில் நான் ஒருவனே மது, மாமிசம், சிகரெட் பழக்கமில்லாதவன். பேராசிரியரும் அவர் மனைவியும் ''உன் பெற்றோர் தொலைவில் சென்னையிலே இருக்கிறார்கள். கவலைப்படாதே'' என்றார்கள். என் பதில்: ''நான் விரும்பியிருந்தால் சென்னையிலேயே இதை ஆரம்பித்திருப்பேனே!'' என் குடும்பத்தினர் பலருக்கு இந்த விஷயம் தெரியும். என் மனம் கெட்டி.

நீங்கள் தள்ளாத வயதில் தேச நன்மைக்காக எழுதுகிறீர்கள். நான் உங்கள் பேரப்பிள்ளைக்குச் சமம். இளைஞர்கள்மீது நம்பிக்கையை விட்டு விடாதீர்கள். ஆயிரக்கணக்கான இளைஞர்கள் உங்கள் ஆசி மொழியைப் பின்பற்றுவார்கள். மனம் கெட்டியாக இருந்தால் எந்தமாதிரி பலகை விளம்பரமாக இருந்தால் என்ன? உங்கள் பொன்மொழிகள் இளைஞர்கள் காதில் கட்டாயம் விழும். உங்கள் வார்த்தையைத் தட்ட மாட்டார்கள். நம் புண்ணிய பூமியின் சாரம் இருக்கும் வரை பல இளைஞர்கள் கட்டுப்பாடுடன் இருப்பார்கள் என்று நான் உறுதி கூறுகிறேன். திருக்கால்களில் நமஸ்கரிக்கின்றேன்.

— ம. சிவராமன்

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-31
Managing Editor: T. Sadasivam

ANNOUNCING!

The sale of

**BLENDED AND FANCY FABRICS**

made by mixing cotton and

**GRASIM** STAPLE FIBRE

from to-day at

AKASH-DEEP, SANDHURST BRIDGE, CHOWPATTY

- Attractive Fancy Dress material for ladies
- Immaculate Bush Shirtings for gents
- Decorative Tapestry and Curtain materials
- Priced cheaper than cotton fabrics



GWALIOR RAYON SILK MFG. (WVG.) CO. LTD., BIRLAGRAM, NAGDA (M.P.)

